# ஞானவிளக்கு

ஆதிசங்கர பகவத் பாதரின் நூல்கள்

மொழியாக்கம்

பஜகோவிந்தம்
கனகதாரா(பொன்மழை)
அன்னபூர்ணாஷ்டகம்
ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியஷ்டகம்
ஸ்ரீபவானியஷ்டகம்
குருபாதுகா ஸ்தோத்ரம்
குரோரஷ்டகம்
நிர்வாண ஷட்கம்

தோடகாச்சார்யார் இயற்றிய தோடகாஷ்டகம்
காஞ்சிப் பராமாச்சார்யாளின் மைத்ரீம் பஜத

சுந்தர் பதிப்பகம்
2, 29வது தெரு
தில்லை கங்காநகர்
சென்னை-600061

விலை ரூபாய் 80

BIBILIOGRAPHY


 : The author

YEAR : 2021

NAME : NJANAVILAKKU

GENRE : TRANSLATION

PAGES :

PRINTER : Real Impact Solutions, Mylapore

PUBLISHER : SUNDAR PATHIPPAGAM
2,29TH STREET,
THILLAIGANGA NAGAR

PRICE : ₹ 80




## சமர்ப்பணம்



சென்றிடுவீர் எட்டுத் திக்கும்–கலைச்
    செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்
என்று மொழிந்தான் ஓர் சித்தன்–அவன்
    என்றும் வளரும் தமிழின்மேல் பித்தன்

வேற்று மொழியில் இருந்து- மிக
    வேண்டித் தமிழில் கொணர்ந்த விருந்து
போற்றியே பாரதி பாதம்–வாசப்
    பூவென வைத்துப் பெறுகிறேன் போதம்

# முன்னுரை

“பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்” என்றார் பாரதியார். பாரத தேசத்திலேயே பல மொழிகள் பயின்று வருவதால் அவற்றிலிருந்தும் தமிழில் கொணர்தல் அதனுள் அடங்கும்.

பெயர்த்தல் என்றால் கெல்லி எடுப்பது. எதனைக் கெல்லி எடுப்பது? ஒரு செங்கல்லையோ கல்லையோ நிலத்திலிருந்து கெல்லி எடுத்தால் வடிவும் வனப்பும் மாறாமல் வேறு இடத்திற்குக் கொண்டு சென்று விட முடியும். ஆனால் ஒரு மொழியில் உருவான கவிதையை வேறு ஒரு மொழிக்கு எடுத்துச் செல்லுவது என்பது காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைக்கிற கதைதான்.

கவிதை என்பது அதை எழுதிய கவிஞனின் உணர்வோட்டத்தை உட்கொண்டது. கவிதை வெறும் கருத்துக் குவியல் அல்ல. தகவல் களஞ்சியம் அல்ல. அதில் மொழியின் விவரணம் இருக்கிறது. விகசிப்பு இரருக்கிறது. துடிப்பிருக்கிறது. துள்ளல் இருக்கிறது. ஏன், அதன் சுவாசம் இருக்கிறது. உயிரோட்டம் இருக்கிறது. அந்த உயிரைச் சேதப்படுத்தாமல் பிடிப்பது மொழிபெயர்ப்பாளனுடைய பணி.

அது அவ்வளவு எளிதல்ல. அதற்கு மொழிபெயர்ப்பாளன் கூடுவிட்டுக் கூடு பாயவேண்டும். தான் அந்தக் கவிஞனுக்குள் சென்றுவிட வேண்டும். அவனது உணர்வோட்டத்தைப் பிடிக்கவேண்டும். சில சமயங்களில் காலங் கடந்தும் செல்லவேண்டும். அதைச் சிந்தாமல் சிதறாமல் எடுத்துவந்து அதைத் தன் மொழிக்கும், பண்பாட்டுக்கும் ஏற்ற வகையில் உருமாற்றிக் கொடுக்க வேண்டும். எந்த மொழிக் கவிதையோ அந்த மொழியின் வடிவத்தையும் வனப்பையும் சிதைக்காமல் தமிழில் கொடுக்க முடியும் என்றால் சிறப்பு. அதற்கு மூல மொழி தமிழின் யாப்போடு ஒத்து இயங்குகிற மொழியாக இருக்கவேண்டும்.. வட மொழியிலிருந்து சில சந்தங்களை அப்படியே தமிழில் கொடுக்க முடியும்.

மூலக் கவிஞனுக்கு உண்மையுள்ளவனாக மொழிபெயர்ப்பாளன் இருக்கவேண்டும். தன் கருத்தைப் புகுத்தி விடக்கூடாது. கூட்டாது குறைக்காது மாற்ற வேண்டும். அப்படிச் செய்யும் போது கவிதையின் அளவு கூடலாம் ,குறையலாம் அதே அளவிலும் இருக்கலாம்.

மொழியாக்கத்தைத் தனது தாய் மொழியில் படிக்கின்ற ஒருவன் , மொழியாக்கம் மூலத்தை விஞ்சியிருப்பதாக எண்ணக்கூடும். அது ஒரு பிரமை. மூலத்தை விஞ்சிய மொழியாக்கம் சிறந்த மொழியாக்கம் அன்று.

இங்கே கொடுக்கப்பட்டிருக்கும் பஜகோவிந்த மொழியாக்கத்தில் ஒரு பாடலைப் பார்க்கலாம். .

பகவத்கீதா கிஞ்சித் அதீதா
கங்காஜல லவ கணிகா பீதா ।
ஸக்ருதபியேந முராரி ஸமர்சா
க்ரியதே தஸ்ய யமேன நசர்சா ॥ 20

ஒரு சிறிதேனும் கீதை படித்து
ஒருதுளியேனும் கங்கை குடித்து
முரஹரி நாமம் ஒருசிறுபோது
மொழிபவர்க் கேது யமனிடம் வாது?

சமஸ்கிருத மூலத்தின் சந்தமும் பொருளும் இயைபுகளும் மொழியாக்கத்திலும் கொணரப்பட்டிருப்பதைக் காணலாம்.

இந்தத் தொகுப்பில் ஆதி சங்கரர் இயற்றியுள்ள பஜகோவிந்தம், கனகதாரா, அன்னபூர்ணாஷ்டகம், தக்ஷிணமூர்த்தி அஷ்டகம், பவானி அஷ்டகம், குருபாதுகா ஸ்தோத்ரம் குர்வஷ்டகம் ஆகியவை இடம் பெற்றுள்ளன. இவைதவிர தோடகாச்சார் இயற்றிய தோடகாஷ்டகம், காஞ்சிப் பெரியவாள் இயற்றியுள்ள மைத்ரீம் பஜத பாடல் ஆகியவற்றின் மொழியாக்கத்தையும் காணலாம்.

பஜகோவிந்தம் மொழியாக்கத்தை 1979ம் ஆண்டு நான் பம்பாயில் இருந்த போது செய்தேன். அங்கே அமரர் திருமதி லக்ஷ்மி அவர்கள் இல்லத்தில் தான் பஜகோவிந்தம் மூலத்தைப் பார்த்தேன். அவர்கள் இல்லஹ்திலேயே அதை மொழியாக்கம் செய்தேன். அமுத சுரபி ஆசிரியர் அமரர் வேம்பு அவர்கள் பஜகோவிந்தம், பொழிக பொன்மழை, அன்னபூர்ணாஷ்டகம், தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் ஆகியவற்றை அமுதசுரபி தீபாவளி மலர்களில் வெளியிட்டார்கள். அவர்களுக்கு என் நன்றி. பொழிக பொன்மழை ஸ்தோத்திரம் பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறது. அதை எழுதிப் பத்திரிகை அலுவலகத்து அனுப்பிய

உடனே எனது அலுவலகத்திலிருந்து ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது. எப்பொழுதோ எனக்குக் கொடுக்கப்படவேண்டிய பணம் கொடுக்கப்படாமல் இருப்பதை அப்பொழுதுதான் கண்டு பிடித்ததாகவும் ஆதரைசேஷன் அனுப்பி அதைப் பெற்றுக் கொள்ளுமாறும் சொன்னார்கள்., இப்படி எத்தனையோ!. விரிக்கின் பெருகும்.

ஐந்து ஆண்டுகட்கு முன்பு நான் சிக்காகோவில் இருந்தபோது என் மனைவி நியூஜெர்சியில் இருந்தாள். ஓர்நாள் தொலைபேசியில் என்னை அழைத்துப் "பவானி அஷ்டகம் மிக நன்றாக இருக்கிறது. இன்று மாலைக்குள் அதை மொழியாக்கம் செய்து மின்னஞ்சலில் அனுப்புங்கள்" என்றாள்." "மொழியாக்கம் செய்து தரமுடியுமா என்று கேட்பதெல்லாம் அவள் வழக்கமில்லை. அவ்வளவு உரிமை. அன்று மாலைக்குள்ளே மொழியாக்கம் செய்து அனுப்பினேன். அதுவும் மூலtத்தின் சந்தத்திற்கேற்ப அமைந்துள்ளது. இன்னொரு நண்பர் கேட்டதற்காகக் குருபாதுகா ஸ்தோத்ரத்தை மொழியாக்கம் செய்தேன். எனது மாப்பிள்ளை பாலாஜி கேட்டதற்காக நிர்வாண ஷட்கத்தை மொழிபெயர்த்தேன்.

பஜகோவிந்தம் மொழியாக்கம் முதலில் கையேடாக வெளியிடப் பட்டபோது அதற்கு முன்னுரையளித்த ஸ்ரீ ஜெயராம சர்மா அவர்கள் கூறுகிறார் "ஆதிசங்கரரின் சுலோகங்களின் சந்தம், கருத்து, உணர்ச்சி இவை மூன்றையும் அப்படியே வடித்துக் கொடுத்திருக்கிறார் இலந்தைக் கவிஞர். அறிவு கொளுத்தும் இந்த ஞானவொளி நமக்குத் தெளிவு நல்குவதாகுக!" அவருக்கு என் நன்றி

இந்தப் புத்தகம் வெளிவர ஆக்கமும் ஊக்கமும் அளித்த அனைவருக்கும் என்றன் நன்றி

அன்புடன்

இலந்தை சு இராமசாமி

# பொருளடக்கம்

# பஜகோவிந்தம்

பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே ।
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ்கரணே ॥ 1

துதி கோவிந்தனை துதிகோவிந்தனை
துதிகோவிந்தனை அடமூடா,
எதிர்நின்று யமன் அழைத்திடும் போது
இலக்கணக் கல்வி காப்பாற்றாது

மூட!ஜஹீஹி தனாகமத்ருஷ்ணாம்
குரு ஸத்புத்திம் மநஸி வித்ருஷ்ணாம் ।
யல்லப ஸே நிஜகர்மோ பாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ॥ 2

மூடனே விடுவாய் பணம்கொளும் தாகம்
மூலம் மனத்தில் உணர்தல் விவேகம்
பாடுபட் டுழைத்துக் கிடைப்பதை உண்டு
பாங்குடன் வாழ்கநீ நிம்மதி கொண்டு

நாரீ ஸ்தனபர நாபீ தேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம் ।
ஏதத்-மாம்ஸ வஸாதி விகாரம்
மனஸி விசிந்தய வாரம் வாரம் ॥ 3

பாவையர் தனபரம் உந்திப்ரதேசம்
பார்த்துக் கொள்ளாதே மோகாவேசம்
யாவும் கொழுப்பு மாமிசப் பாண்டம்
ஆராய்ந் தறிவாய் மீண்டும் மீண்டும்

நளினீ தலகத ஜலமதிதரலம்
தத்வத் ஜீவித மதி சய சபலம் ।
வித்தி வ்யோத்யபி மானக்ரஸ்தம்
லோகம் சோக ஹதம் ச ஸமஸ்தம் ॥ 4

தாமரை இலைமேல் தண்ணீர்த் திவலை
சஞ்சலம் வாழ்க்கை என்றும் கவலை
சேமக் குறைவு நோய்நொடி கலகம்
சிந்தை மயக்கம் இதுதான் உலகம்

யாவத் வித்தோபார் ஜனஸக்த :
தாவத் - நிஜபரிவாரோ ரக்த: ।
பஸ்சாத் ஜீவதி ஜர்ஜரதேஹே
வார்தாம் கோsபிந ப்ருச்சதி கேஹே ॥ 5

வசதி உளவரை உறவினர் கூட்டம்
வருமா னத்தில் தானவர் நாட்டம்
அசதி முதுமை எய்திடும் போது
யாதெனக் கேட்டு வருபவர் ஏது?

யாவத் பவநோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குசலம் தேஹே ।
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மின்காயே ॥ 6

உள்ளே மூச்சு நின்றால் போச்சு
உன்நலம் பற்றி உசவும் பேச்சு
அள்ளும் அன்பின் அருமை இல்லாள்
அருவருப் படைவாள் அருகில் நில்லாள்

பாலஸ் தாவத் க்ரீடாஸக்த:
தருணாஸ் தாவத் தருணீ ஸக்த: ।
வ்ருத்தஸ் தாவத் சிந்தாஸக்த:
பரே ப்ரஹ்மணி கோsபி நஸக்த: ॥ 7

மதலைப் பருவத்தில் விளையாட்டு
மங்கைய ரோடே இளமையில் கூட்டு
முதுமை எய்த சிந்தை விசாரம்
மூலம் உணர யாருக்கு நேரம்?

காதே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோsய மதீவ விசித்ர: ।

கஸ்ய த்வம் க:குத ஆயாத:
தத்வம் சிந்சய யதிதம் ப்ராத: ॥ 8

யாருன் மனைவி? யாருன் பிள்ளை?
ஆகா வாழ்க்கை விசித்திரக் கொள்ளை
யாருன் முன்னோர் ஊரும் எங்கே
அறிவாய் தம்பி , உண்மை இங்கே!

ஸத்ஸங்கத்வே நி:ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।
நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சலிதத்வே ஜீவன் முக்தி : ॥ 9

உயர்ந்தோர் நேசம், ஒடுக்கும் பாசம்
ஒடுக்கும் பாசம், அயர்க்கும் மோகம்
அயர்க்கும் மோகம் ஆழ்திட சித்தம்
ஆழ்திட சித்தம் ஜீவன் முக்தி!

வயஸி கதே க:காமவிகார :
சுஷ்கே நீரே க:காஸார: ।
க்ஷீணே வித்தே க:பரிவார:
ஜ்நாதே தத்வே க:ஸம்ஸார :॥ 10

வயதும் ஆனால் காமமும் எங்கே?
வற்றிய பின்னே நீர்நிலை எங்கே?
உயர்பொருள் போனால் எங்கே சொந்தம்?
உண்மை உணர்ந்தால் எங்கே பந்தம்?

மா குரு தனஜன யௌவன கர்வம்
ஹரதி நிமேஷாத் கால:ஸர்வம் ।
மாயா மய மித மகிலம் ஹித்வா
ப்ரஹ்மபதம் த்வம் ப்ரவிச விதித்வா ॥ 11

தனம் இனம் இளமை தருக்குக் கொள்ளாதே
சட்டென் றழியும் , தம்பி, துள்ளாதே
அனைத்தும் மாயையென் றறிந்ததன் பின்னே
அடைவாய் பிரம்ம பதத்தை முன்னே!

தினயா மிந்யெள ஸாயம் ப்ராத :
சிசிர வஸந்தெள புனரா யாத: ।
கால:க்ரீடதி கச்சத் யாயு :
ததபி ந முஞ்சதி ஆசா வாயு : ॥ 12

விடியல், அந்தி ,பகல் இரவென்றும்
மீண்டும் வசந்தம் பனியெனச் சென்றும்
நடிக்கும் காலம் , வாழ்வும் நடக்கும்
நலிவென யாரே ஆசை விடுக்கும்?

கா தே காந்தா தனகதச ிந்தா
வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா ।
த்ரிஜகதி ஸஜ்ஜன ஸங்கதி ரேகா
பவதி பவார்ணவ தரணே நௌகா ॥ 13

ஏடா மூடா, மனை பணம் என்று
ஏங்கிக் கவல்கிறாய், நடத்திடும் ஒன்று
போடா நல்லோர் கூட்டம் பேணி,
புல்லிய பிறவி கடப்பதத் தோணி

ஜடிலோ முண்டீ லுஞ்சித கேச:
காஷா யாம்பர பகுக்ருத வேஷ:
பச்ய ந்நபி ச ந பச்யதி மூட:
ஹ்யுதர நிமித்தம் பகுக்ருத வேஷ: ॥ 14

காவி உடுப்பான், நீட்டி மழிப்பான்
கையால் தலைமுடி கிள்ளி எடுப்பான்
மேவிடும் வேஷம் வயிற்றினுக் கென்றே
வீணர்கள் கண்டும் காணா ரன்றே!

அங்கம் கலிதம் பலிதம் முண்டம்
தசன விஹீநம் ஜாதம் துண்டம் ।
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத் யாசா பிண்டம் ॥ 15

வாயோ பொக்கை, கைகால் ஆட்டம்
வாடிடும் தேகம் நரைதிரைக் கூட்டம்
ஓயாதே கோல் ஊன்றிடும் தேட்டம்
ஒழியா ஆசை இன்னுமேன் நாட்டம்?

அக்ரே வஹ்நி: ப்ருஷ்டே பானு:
ராத்ரௌ சுபுக ஸமர்பித ஜானு: ।
கரதல பிக்ஷஸ் தருதல வாஸ:
ததபி ந முஞ்சத் யாசா பாச: ॥ 16

இரவினில் முழங்கால் இடைமுகம் வைப்பான்
எரிமுன் கதிர்பின் ஆக இருப்பான்
மரத்தடி வாசம், எடுப்பது பிச்சை
வாட்டுதே இவனையும் மாபெரும் இச்சை

குருதே கங்கா ஸாகர கமநம்
வ்ரத பரிபாலன மதவா தானம் ।
ஜ்ஞான விஹீந: ஸர்வமதே ந
முக்திம் ந பஜதி ஜன்ம சதேந ॥ 17

தானம் அநேகம், விரதம் எடுப்பு
சங்கம கங்கைப் பயணம் தொடுப்பு
ஞானம் இலையெனில் பிறவிகள் நூறு
நண்ணியும் அடையான் முக்தியாம் பேறு?

ஸுர மந்திர தருமூலநிவாஸ:
சய்யா பூதல மஜினம் வாஸ: ।
ஸர்வ பரிக்ரஹ போக த்யாக:
கஸ்ய ஸுகம் நகரோதி விராக: ॥ 18

கோயில் மரநிழல் மண்ணில் படுக்கை
கொஞ்சமாய்த் தோலினால் ஆடை உடுக்கை
ஏயும் உடைமை விடுக்கும் வைராக்யம்
ஏற்றால் பெறுவான் சுகமெனும் பாக்யம்?

யோக ரதோ வா போகரதோ வா
ஸங்கரதோ வா ஸங்கவிஹீந: ।
யஸ்ய ப்ரஹ்ணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ॥ 19

யோகத்திடையும் போகத் திடையும்
கூட்டத் திடையும் தனிமையின் இடையும்

ஏகன் இறைவன் நினைவே இன்பம்
இன்பம் இன்பம் ஈடிலா இன்பம்

பகவத்கீதா கிஞ்சித் அதீதா
கங்காஜல லவ கணிகா பீதா ।
ஸக்ருதபியேந முராரி ஸமர்சா
க்ரியதே தஸ்ய யமேன நசர்சா ॥ 20

ஒரு சிறிதேனும் கீதை படித்து
ஒருதுளி யேனும் கங்கை குடித்து
முரஹரி நாமம் ஒருசிறு போது
மொழிபவர்க் கேது யமனிடம் வாது?

புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீஜடரே சயனம் ।
இஹ ஸம்ஸாரே பகுதுஸ்தாரே
க்ருபயாऽபாரே பாஹி முராரே ॥ 21

திரும்பவும் பிறப்பு திரும்பவும் இறப்பு
திரும்பத் திரும்பத் தாய்குடல் கிடப்பு
கரையினைக் கடக்க வழியிலை இங்கே
கனிவாய் முராரி காப்பதுன் பங்கே!

ரத்யா கர்பட விரசித கந்த :
புண்யா புண்ய விவர்ஜித பந்த: ।
யோகீ யோக நியோஜித சித்த :
ரமதே பாலோன்மத்த வதேவ ॥ 22

பாதையில் கிடக்கும் கந்தல் உடுப்பான்
பகவான் நினைவில் யோகி கிடப்பான்
பாதக பாவ புண்ணியம் கடப்பான்
பாலன் பைத்தியம் போல நடப்பான்!

கஸ்த்வம் கோऽஹம் குத ஆயாத :
காமே ஜனனீ கோ மே தாத : ।
இதி பரிபாவய ஸர்வ மஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்னவிசாரம் ॥ 23

எங்கிருந் தேநான் வந்தேன், நான்யார்?
என்தாய் தந்தை நீயும் யார் யார்?
இங்கிதை எண்ணிப் பாசம் நீக்கு
எல்லாம் கனவின் ஆட்டம் போக்கு

த்வயி மயி ஸர்வத்ரைகோ விஷ்ணுஃ
வ்யர்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணுஃ |
பவ ஸமசித்தஃ ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத்-யதி விஷ்ணுத்வம் || 24 |

என்னிலும் உன்னிலும் எங்கும் அவனே
என்னிடம் ஏனடா கோபம் வீணே?
உன்னதம் இறைநிலை என்பது யாரும்
ஒன்றென எண்ணிடத் தான்வந்து சேரும்

சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்னம் விக்ரஹஸந்தௌ ।
ஸர்வஸ்மின் அபி பச்யாத்மானம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேத ஜ்யானம் 25

நண்பன், பகைவன், புத்திரன் சுற்றம்
நட்பு, பகைமை முயலுதல் குற்றம்
நண்ணிடும் ஆன்மா அனைத்திலும் என்றே
நாடி, பேதம் அகற்றுக நன்றே!

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாऽத்மானம் பாவயகோऽஹம் ।
ஆத்மஜ்ஞான விஹீனா மூடா:
தே பச்யந்தே நரக நிகூடா: ॥ 26

காமம், குரோதம் லோபம் , மோகம்
கைவிட்டே நான் அவன் எனல் யோகம்
நேமம் ஆத்ம ஞானமே இன்றி
நிற்பவன் நரகில் வாடுவான் குன்றி!

கேயம் கீதா நாமஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதி ரூபம ஜஸ்ரம் ।
நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்
தேயம் தீனஜ நாய சவித்தம் ॥ 27

பாடுதல் கீதை,  ஆயிரம் நாமம்
பதித்தல் திருமகள் கேள்வன் கோலம்
தேடுதல் நல்லவர் கூட்டம், தேவை
தீனருக் குதவிடும் உயர்வே சேவை!

ஸுகத:க்ரியதே ராமாபோக:
பஸ்சாத் ஹந்த சரீரே ரோக: ।
யத்யபி லோகே மரணம் சரணம்
ததபி ந முஞ்சதி பாபாசரணம் ॥ 28

இன்பம் வேண்டித் தாசியை அணைவார்
இறுதியில் நோயின் வாயில் இணைவார்
என்றோ சாவு நிச்சயம், யாரே
இங்கே பாவச் செயல் விடுப்பாரே!

அர்த்த மனர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத:ஸுகலேச:ஸத்யம் ।
புத்ராதபி தனபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: 29

சிந்தித் துப் பார், செல்வம் தீது
தேவை மீறப் பயன் தாராது
சொந்த மகனைக் கண்டும் அஞ்சும்
சொத்தின் நிலையது பயந்தான் மிஞ்சும்.

ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்யவிவேக விசாரம் ।
ஜாப்ய ஸமேத ஸமாதிவிதானம்
குர்வ வதானம் மஹதவதானம் 30

உள்ளதும் அல்லதும் பேதம் குறித்து
உன்செயல் ஒடுக்கி, ஒன்றை நிறைத்து
உள்ளத் தமைதி உற்றிட என்றே
ஒழுங்காய்ச் செய்க தபஜபம் நன்றே

குருசரணாம்புஜ நிர்பரபக்த:
ஸம்ஸாராத சிராத் பவமுக்த: ।

ஸேந்த்ரியமானஸ நியமாதேவ
த்ரக்ஷ்யஸி நிஜஹ்ருதயஸ்தம் தேவம்

குருவின் பதமலர் பணிந்திடும் பக்தி
கொண்டிடும் அன்பா, நிச்சயம் முக்தி
கருவிகள் கட்டிப் புகுவாய் தஞ்சம்
கடவுள் வந்து நிறைவான் நெஞ்சம்!



# பொழிக பொன்மழை!

***கனகதாரா ஸ்தோத்திரம் இயற்றப்பட்ட வரலாறு.***

*இளஞ்சங்கரன் துறவியான புதிது. துறவிகள் பிக்ஷை யெடுத்துத் தான் கிடைப்பதைக் கொண்டு உண்ண வேண்டும். இளந்துறவி சங்கரர் ஒருநாள் காலை ஒரு பெண்மணி வீட்டின் முன் நின்று "பவதி பிக்ஷாந்தேஹி" என்று குரல் கொடுத்தார். அந்தவீட்டுப் பெண்மணி எட்டிப் பார்த்தாள். அவளது கணவர் வயல்களில் சிந்தியிருக்கும் நெல்மணிகளைப் பொறுக்கப் போயிருந்தார். சங்கரர்க்குப் போடுவதற்கு முறையான உணவாக ஏதும் இல்லை. "எப்படி இல்லையென்று சொல்லுவேன்!" சங்கரன் திரும்பிப் போய்விடக் கூடாதா என எண்ணினாள் அந்தப் பெண்மணி. உள்ளே சென்றாள். "என்ன அழகான வதனம், என்னே அருள் நோக்கு. அந்தக் குழந்தை போய்விடக்கூடாதே அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் போல் தோன்றுகிறதே என வெளிய வந்து பார்த்தாள். இப்படி உள்ளுக்கும் புறத்துக்கும் நடந்துகொண்டிருந்த அவள் நிலையைப் பார்த்துச் சங்கரர் சொன்னார்.*

*"அம்மா, எவ்வளவு சிறியதாக இருந்தாலும் பரவாயில்லை. ஒரு ஊறுகாய்த் துண்டானாலும் போதும்" என்றார். வீட்டில் ஊறுகாய்ப் பரணியில் ஒரு சிறு நெல்லிக்காய் இருந்தது நினைவுக்கு வந்தது*

*"நான் கொடுக்கக் கூடியதைக் கேட்டாயே" என்று மகிழ்ந்து உள்ளே சென்று அந்த நெல்லிக்காய்த் துண்டத்தை எடுத்து வந்து சங்கரரின் திருவோட்டில் போட்டுவிட்டு அவ்வளவு சிறியதாகக் கொடுக்க நேர்ந்ததே என்று வெட்கப்பட்டுக் கொண்டு உள்ளே சென்று கதவோரமாக நின்று பார்த்தாள்.*

*கருணைக் கடலான சங்கரர் அவளுக்கு ஏதேனும் உதவி செய்ய வேண்டும் என்று எண்ணினார். அவரோ துறவி. கொடுப்பதற்கு என்ன உண்டு. எனவே செல்வங்களுக் கெல்லாம் அதிபதியான திருமகளை வேண்டிப் பாடினார். அது தான் கனகதாரா. அவர் பாடத்தொடங்கிய போது திருமகள் அவருள் சென்று "சங்கரா, அவளுக்கு இந்தப் பிறவியில் செல்வம் பெறும் பிராப்தம் இல்லை" என்றாள்*

*"அம்மா, நீயா இப்படிச் சொல்கிறாய்? பிராரப்த வினைகள் உன்முன் என்ன செய்யும்? அவற்றையெல்லாம் அடக்குபவளல்லவா நீ.?. சரி அது*

போகட்டும். எனக்குப் பிராப்தம் இருக்கிறதா? " என்று கேட்டார். "உனக்கா, என்னவேண்டும் என்று கேள்" என்றாள் திருமகள்.

"நான் எனக்காகக் கேட்கிறேன். நீ கொடுப்பதை அவளுக்கு மடைமாற்றிவிடுவிடுவதாகச் சங்கல்பம் செய்து கொள்கிறேன். அம்மா, பெறுவதற்குத் தகுதியானவர் யாரோ அவருக்குத்தான் கொடுப்பாய் என்பது தெரியும். அம்மா என்னை விட வறியவன் ஒருவன் இருக்க முடியுமா? நான் முதன்மையான ஏழை அல்லவா" என்றார் சங்கரர். சங்கரின் சாதுர்யமான பதிலைக் கேட்டு மகிழ்ந்த திருமகள் நெல்லிக்கனி கொடுத்தவளுக்குப் பொன் நெல்லிக்கனிகளாக வீடு முழுதும் பொழிந்து தள்ளிவிட்டாள்

பெரியவர்கள் தனக்காக என்று வேண்டுவதெல்லாம் மற்றவர்களுக் காகத்தான். எல்லோருக்கும் வேண்டத் தெரியும் என்று சொல்லிவிட முடியாது . வேண்டுவது எப்படியென்றும் அவர்கள் சொல்லிக் கொடுத்து விடுவார்கள். மற்றவர்களுடைய பிழைகளையும் தம் பிழையாக ஏற்று வேண்டுவர். காமம் என்றால் என்னவென்று அறியாதவர்கூடத் தான் ஒரு காமப் பிசாசு என்னைக் காப்பாற்று என்று சொல்லுவார். அது வேறு ஒருவரின் வேண்டுதலாக மடைமாற்றப்படும்.

இந்தக் கனகதாரா ஸ்தோத்திரத்தை நான் மொழியாக்கம் செய்து முடித்தவுடன்" உங்களுக்குக் கொடுக்கவேண்டிய பணம் கொடுக்க விட்டுப் போயிருக்கிறது. உடனே வந்து வாங்கிக் கொள்ளுங்கள்" என்று என் அலுவகத்திலிருந்து தொலைபேசி அழைப்பு வந்தது. அந்த ஆண்டே வெளிநாட்டுப் பணிக்குத் தேர்வு செய்யப்பட்டேன்

1986ம் ஆண்டு டிசம்பர் மாதம் 12ந்தேதி டெல்லி தமிழ்ச்சங்கத்தில் என்னைப் பேச அழைத்திருந்தனர். 95 லட்சம் வங்கிக் கடன் பெற்று அவர்கள் அந்தக் கட்டித்தைக் கட்டியிருந்தார்கள். மேற்கொண்டு 5 இலட்சம் இல்லாதால் கட்டடம் முற்றுப் பெறாமல் இருந்தது. தமிழக அரசிடம் உதவி கேட்டனர். பலனில்லை. எனவே நான் பேசும் போது கூட்டத்திற்கு வந்திருப்பவர்களிடம் நன்கொடை கொடுக்கும் படி சொல்லவேண்டும்" என்று சொன்னார் துணைத்தலைவர் கிருஷ்ணமூர்த்தி அன்று நல்ல குளிர். 20 பேர்தான் கூட்டத்திற்கு வந்திருந்தனர். நான் பேசத் தொடங்கும்முன்" இந்த 20 பேரிடம் நன்கொடை கொடுக்கச்சொல்லி வேண்டுகிறேன். அத்தோடு சமீபத்தில்

*கனகாதாரா ஸ்தோதிரத்தைத் தமிழ்ப்படுத்தி யிருக்கிரேன். அந்தப் பாடலை இங்கே சொல்கிறேன். நல்ல பலனிருக்கும் என்று சொல்லி 21 பாடல்களின் தமிழ் வடிவத்தைச் சொன்னேன். 1987 ஜனவரி மாதம் 19ந்தேதியன்று கிருஷ்ணமூர்த்தி அவர்கள் என் அறைக்கு வந்தார்" நீங்கள் சொன்னது நடந்துவிட்டது. மாளவியா நகரில் தமிழக அரசின் சார்பில் பாரதி சிலை திறக்கிறார்கள். பிரதம மந்திரி இராஜீவ் காந்தி திறந்துவைக்கிறார். அப்பொழுது எம் ஜி யார் 5 இலட்சம் ரூபாய்க்கான காசோலையை ஒரு சந்தனப் பேழையில் வைத்துத் தமிழ்ச்சங்கத்துக்கு வழங்கப் போகிறார். அந்த நிகழ்ச்சிக்கு நீங்கள் வரவேண்டும்" என்றார்.*

*இன்னும் எத்தனையோ? இனி, பாடலுக்குள் போகலாம்.*



**1. அங்கம் ஹரே:புலக பூஷணமாச்ரயந்தீ**

**ப்ருங்காங்கனேவ முகுலாபரணம் தமாலம்|**

**அங்கீக்ருதாகில விபூதிரபாங்க லீலா**

**மாங்கல்யதாஸ்து மம மங்கல தேவதாயா:||**

**ஆர்வமாய் உடல்சி லிர்க்கும் அரியவன் ஆகம் மீது**

**வார்பசும் மரத்தின் மொட்டாய் வண்டென வளரும் மாது**

**ஆர்ந்திடும் மங்கலங்கள் அதிபதி கடைக்கண் நோக்கச்**

**சேர்ந்திடும் செல்வம் என்பால் திருமகள் அளித்துக்**
**காக்க**! 1

யாரிடமாவது ஒரு காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டுமென்றால் அவர் மகிழ்ச்சியாக இருக்கும் நேரம் பார்த்துச் சென்று கேட்டால் உடனடியாக நல்ல பலன் கிடைக்கும். திருமகள் அருகில் நெருங்கி வருகிறாள் என்று உணரும் போதே திருமாலுக்கு மயிர்க்கூச்செடுக்குமாம். அத்துணை ஆர்வம், அத்துனை ஈர்ப்பு, அத்துணை அன்பு. அப்படி ஆர்வமாக உடல்சிலிர்க்கப் படுக்கையில் கிடக்கும் அவன் பச்சைமா மலைபோல் மேனியாக இருக்கிறான். அவனுடைய பசுமையான மார்பின் மீது, பச்சை நிறத் தமாலாமரத்தின் பூமொட்டு போலக் கருநிற வண்டெனக் கண்ணயர்ந்து கொண்டிருக்கிறாள் திருமகள். அப்படியொரு மயக்கம். கண்கள் பாதி திறந்திருக்கின்றன. . அவள்தான் எல்லாச் செல்வங்களுக்கும் மங்கலங்களுக்கும் அதிபதி. வரம் கேட்பதற்கு ஏற்ற மகிழ்வான தருணம்.

பலபட்டைச் சொக்கநாதர் என்றொரு புலவர் இருந்தார். அவர் ஒரு பாடலில் காந்திமதி அம்மையைப் பார்த்து "அம்மா நீ மகிழ்ச்சியாக இருக்கும் நேரத்தில் என் குறைகளை உன் கணவரிடத்தே சொல்லக்கூடாதா ? அப்படிக் கேட்டால் உன் வாய்முத்தம் உதிர்ந்து விடுமா?" எனக் கேட்கிறார்.

"ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீது, உன் அருகு இருந்து,

"நீ முத்தம் தா" என்று அவர் கொஞ்சும்வேளையில், நித்தம் நித்தம்

வேய்முத்தரோடு என் குறைகள் எல்லாம் மெல்ல
மெல்லச் சொன்னால்,

வாய்முத்தம் சிந்திவிடுமோ? நெல்வேலி வடிவன்னையே."

அப்படி மகிழ்வான தருணத்தில் ஆதிசங்கரரும் கேட்கிறார்

அவள் கடைக்கண் பார்த்தால் போதும் செல்வங்கள் மழையாகப் பொழியும். அவள் முழுக்கண்ணும் திறந்து பார்த்தால் அவள் கொடுப்பதை பெறுவதற்கு நம்மால் இயலாது. அதனால் தான் அபிராமி பட்டர் கூடக்

~கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே!" எனச் சொல்கிறார்

.எனவே சங்கரர்." நீ கடைக்கண் பார். அது போதும் . அப்பார்வை
நல்கும் செல்வத்தை எனக்கு வழங்கு" என்கிறார்.

**கடைக்கண் நாட்டம்**
**செல்வக் கூட்டம்**



**2. முக்தா முஹு§:விதததீ வதனே முராரே:**

**ப்ரேமத்ரபாப்ரணிஹிதாநி கதாகதாநி|**

**மாலா த்ருசோ:மதுகரீவ மஹோத்பலே யா**

**ஸாமேஸ்ரீயம் திசது ஸாகரஸம்பவாயா:||**

**முரஹரி முகத்தை நோக்கி முகிழ்த்திடும் அன்பினாலே**

**திருமகள் பார்ப்பாள் , வெட்கம் தின்றிட மறித்துப் பார்ப்பாள்**

**கருநெய்தல் திரியும் வண்டாய்க் கறங்கிடும் கண்கள் என்பால்**

**பெருகிடும் செல்வம் சேர்க்க, பேரருள் அளித்துக் காக்க!** 2

திருமாலுக்கு முரஹரி அல்லது முராரி என்ற பெயரும் உண்டு. முரன் என்னும் அரக்கனை வென்றதால் முரஹரி என்று பெயர். முரன் மிகக் கொடியவன். திருமால் அவனுடன் ஆயிரக்கான வருடங்களாகப் போர் புரிந்தார். முரன் பெற்றிருந்த வரபலத்தால் அவனை வெல்லக் கூடவில்லை. திருமால் களைத்துப்போய் பத்ரிகாஸ்ரம் அருகில் ஒரு சிறிய குகைக்குள் ஓய்வெடுக்க வந்துவிடுகிறார். அங்கே அவர் உறங்கும் போது முரன் அங்கும் வந்து போர் புரியத் தொடங்குகிறான் அப்பொழுது திருமாலின் உடலிலிருந்து அவரது சக்தியெல்லாம் ஒன்று திரண்டு வெளிவந்து பெண்ணுருக் கொண்டு முரனைக் கொன்று விடுகிறாள். கண்விழித்த திருமால் அந்தப் பெண்ணைப் பார்த்து "உனக்கு என்ன வரம் வேண்டும் " என்று கேட்க இந்தத் தினத்தில் உபவாசம் இருப்பவர்கள் முக்தி யடையவேண்டும் என்று கேட்கிறாள். அந்த நாள்தான் ஏகாதசி. திருமால் அந்த வரத்தைத் திருமால் அளிக்கிறார். தன் சக்திமூலம் முரனை வென்றுவிட்டதால் மகிழ்ந்திருக்கும் திருமாலை மனத்தாலே வென்றவளாகத் திருமகள் விளங்குகிறாள். அந்த வெற்றிப் பெருமித்தில் அன்பு மீதூர அவன் முகத்தைப் பார்க்கிறாள். அவனும் ஆர்வத்தோடு பார்க்கிறான். அந்தப் பார்வை அவளுக்கு நாணத்தைத் தருகிறது. கண்களைத் திருப்பிக் கொள்கிறாள். ஆனாலும் அவனைத் திரும்பிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. எனவே மீண்டும் பார்க்கிறாள் .பார்ப்பதும் திரும்புவதுமாக நடந்துகொண் டிருக்கிறது அவனது பார்வை அலைபாய்வது எப்படி இருக்கிறது என்பதற்கு அழகான உவமையொன்றைச் சொல்கிறார் சங்கரர்.

ஒருவண்டு கருநெய்தல் மலரில் இருக்கும் தேனை உண்ணச் செல்கிறது. பாதித்தேனை உண்டவுடன் தீர்ந்துவிடுமே அப்புறம் வரலாம் என்று சிறிது தூரம் செல்கிறது. அந்தத் தேனின் மீது உள்ள ஆசை அதனை விடுவதாக இல்லை எனவே மீண்டும் வந்து கொஞ்சம் குடிக்கிறது. திரும்பி வருகிறது இப்படிக் கருநெய்தல் வண்டைப் போலத் திருமகள் கண்களும் அங்குமிங்கும் அலைகின்றனவாம். அந்த அலைச்சலும் ஒரு மகிழ்ச்சிதானே. "அம்மா, அலைபாயும் உன் கண்கள் எனக்குப் பெருகிடும் செல்வத்தைத் தருவதாக" என வேண்டுகிறார். பெருகிடும் செல்வம் என்றதாலே எவ்வளவுதான் செலவுசெய்தாலும் குறையாமல் வளர்ந்து கொண்டிருக்கக் கூடிய செல்வம். அவ்வகைச் செல்வத்தைத் தருவதாக மட்டுமல்லாமல் அன்னையின் பேரருள் அக் காக்கவும் வேண்டும் என்கிறார்.

**அள்ளிக் கொடுப்பாள் அதை நன்கு காத்திடுவாள்**
**வள்ளல் தருவாள் வரம்**

## 3. விச்வாமரேந்த்ர பதவிப்ரம தானதக்ஷம்

## ஆனந்த ஹேது ரதிகம் முரவித்விஷோபி|

## ஈஷந்நிஷீதது மயி க்ஷண மீக்ஷணார்தம்

## இந்தீவரோதரஸஹோதரமிந்திராயா:||

**அணிகரு நெய்தல் போலும் அழகிய தேவி கண்கள்**

**பிணிமுரன் தன்னைக் கொன்ற பெருந்தகைக்கு இன்பம் ஊட்டும்**

**பணிபவர்க்கு இந்த்ர லோகப் பதவியைக் கூட்டு விக்கும்**

**கணப்பொழு தேனும் என்மேல் கடைவிழி நோக்கிக் காக்க!**
3

திருமகளின் அலைபாய்கின்ற கண்களுக்குக் கருநெய்தல் மலரைச் சுற்றும் வண்டினை ஒப்பாக முந்தைய பாடலில் பார்த்தோம். இந்தப் பாடலில் தேவியின் கண்களே கருநெய்தல் மலர்களைப் போல் இருக்கின்றன என்று சொல்கிறார். இப்பொழுது வண்டாகக் கருநெய்தலைச் சுற்றுவது யார் தெரியுமா? வேறு யார் திருமால்தான். அக்கண்கள் அவருக்கும் பேரின்பத்தை. அளிக்கின்றனவாம். கொடிய அரக்கன் முரனை வென்ற அவரையே வெற்றி கொண்டவை அல்லவா அக்கண்கள். அவருக்குப் பேரின்பத்தை அளிக்கும் அக்கண்கள் திருமகளைப் பணியும் அடியாருக்கு இந்திர லோகப் பதவியையே அளிக்கின்றனவாம். அப்படியென்றால் இந்திர போகத்தையே

அளிக்கின்றனவாம்.
போகங்களின் உச்சம் இந்திர போகம் என்று சொல்லப்படுகிறது. என்ன தேவையோ அது அங்கே கிடைக்கும் .மற்ற இடங்களில் கேட்டதுதான் கிடைக்கும். அங்கே கேட்டதுக்கு மேல் கொஞ்சம் கொசுறும் கிடைக்கும். அங்கே இன்பங்களை அனுபவிக்கலாம். ஆனால் எதிர்விளைவுகள் கிடையாது. நோய் தாக்கிவிடுமோ என்ற பயங்கிடையாது. முதுமை வந்துவிடுமோ என்ற அச்சம் கிடையாது. திகட்டிவிடுமோ என்கிற ஐயமும் தேவை இல்லை.
போகங்கள் ஒன்றா இரண்டா? உண்ணுவதற்கு ஓராயிரம் மாறுபட்ட சுவைகள். உறங்குவதற்கு படுக்கை சுகம், தென்றலின் இதமான வருடுதல்.. நுகர்வதற்கு வித வித வாசனைகள். துர்நாற்றம் கிடையாது. வாசனைகள் என்னென்ன கொண்டு வருகுது காற்று என்று அனுபவித்துக் கொண்டே இருக்கலாம்.
காதுக்குச் சுகமோ கணக்கில. கந்தர்வர், கின்னரர் கிம்புருடர் என்று வேண்டிய இசை வழங்கிக்கொண்டிருப்பர்.
அமராவதி நகர் முழுவதுமே காலத்திற் கேற்பக் குளிர்பதனம் செய்யப்பட்து போல இருக்கும். அவரவருக் கேற்றவகை அமையும். ஆடற்கலையில் வல்லவர்கள் தமது கலைகளின் வித்தகத்தைக் காட்டி ஆடுவார்கள். ஊர்வசி ரம்பை திலோத்தமை, மேனகை என ஆடலரசிகளின் நாட்டியம் அடிக்கடி நிகழும். கேட்டதைக் கொடுக்கும் கற்பகத்தரு அங்கே உண்டு . எண்ணியதைக் கொடுக்கும் காமதேனுவும் அங்கே உண்டு.
கண்ணுக்கு இதமூட்ட நந்தவனம். அண்டங்களத்தினும் உள்ள அழகு மலர்கள் அங்கே உண்டு. வாசனை மலர்களும் உண்டு. மரங்கள் தவிர வண்ணமயமான இலைகள், படிவக் கற்கள் எனப்பலவும் உண்டு.

பக்தி இலக்கியத்தில் பார்த்தால் ஒவ்வொருவரும் இந்திரலோகப் பரிசைப் போட்டிப் போட்டுக்கொண்டு பாடுகி்றார்கள். அபிராபி அம்மையை வணங்கினால் வணங்குபவருக்கு என்னவெல்லாம் கிடைக்குமென அபிராமி பட்டர் பட்டியலே இடுகிறார்

தங்குவர் கற்பகத். தாருவின் நீழலில்,
விரவும் புதுமலர் இட்டுநின் பாத விரைக்கமலம் இரவும் பகலும்
இறைஞ்சவல்லார் இமையோர் எவரும் பரவும், பதமும், அயிராவதமும்,
பகீரதியும் உரவும் குலிகமும் கற்பகக் காவும் உடையவரே.
பல்லியம் ஆர்த்து எழ வெண்பக டூரும் பதம் தருமே.

இன்னும் ஒருபடி மேலே போய்

அவளைப் பணிமின் கண்டீர் அமராவதி ஆளுகைக்கே. என்கிறார். இத்தகைய இந்திர லோகப் பதவியைத் திருமகளின் பார்வை

---

**4 ஆமீலிதாக்ஷமதிகம்ய முதா முகுந்தம்**

**ஆனந்த கந்த மநிமேஷ மனங்கதந்த்ரம்||**

**ஆகேரஸ்தித கநீநிக பக்ஷநேத்ரம்**

**பூத்யை பவேத் மம புஜங்கசயாங்கநாயா:||**

**அரவணைப் பள்ளி கொண்ட அரியவன் தேவி, பாதி**

**விரிந்திடும் விழியால், அந்த விமலனை உவந்து பார்க்கப்**

**பெருகிடும் காம இன்பம், பெருந்தகை மகிழ்ந்து போவான்**

**திருவருள் அந்தப் பார்வை செல்வங்கள் தந்து காக்க! 4**

பாம்புப் படுக்கையிலே படுத்திருக்கிறான் பரந்தாமன். திருப்பாற்கடலிலே பாம்புப் பாடுக்கை அலைகளின் ஓட்டத்தில் ஊஞ்சல் போல ஆடுகிறது. அலையடிக்கும் ஓலம் தாலாட்டுப் பாடுகிறது பாம்பின் உடலோ தண்ணென்றிருக்கிறது. இந்தச் சூழல் போதாதா? திருமகள் பாம்புப் படுக்கையிலே பள்ளிகொண் டிருப்பவன்மேல் ஒரு அரைக்கண் பார்வையை ஆனந்த மாக வீசுகிறாள். பரந்தாமன் பரவசப் படுகிறான். எழுச்சி பெறுகிறான். அவன் உள்ளத்திலே காம இச்சை பொங்குகிறது. மகிழ்ச்சியின் உச்சத்துக்குச் சென்றுவிடுகிறான். அப்படிப்பட்ட மகிழ்ச்சியை அவனுள் எழுப்பிய அந்தப் பார்வை ஆனந்தப் பார்வை. அருள் பார்வை. அள்ளிக் கொடுக்கும் பார்வை. அந்தப் பார்வை என்மேல் சற்றே பட்டு செல்வத்தைத் தந்து காப்பாற்றட்டும் என்கிறார் சங்கரர்

**திருவருள் பார்வை என்மேல் வீழட்டும்**
**செல்வம் அனைத்தும் இங்கே சூழட்டும்!**

**. 5 பாஹ்வந்தரே மதுஜித:ச்ரித கௌஸ்துபே யா**

**ஹாராவலீவ ஹரிநீலமயீ விபாதி|**

**காமப்ரதா பகவதோபி கடாக்ஷமாலா**

**கல்யாணமாவஹதுமே கமலாலயாயா:||**

**வெங்கொடும் மதுவரக்கன் வீழ்ந்திடச் செய்தான் மார்பில்**

**பொங்கிடும் ஆரத் தோடே பூத்திடும் நீல மென்ன**

**பங்கயச் செல்வி கண்கள் பட்டொளி வீசித் தோன்றும்**

**மங்கலம் அனைத்தும் அந்த மலர்விழி தந்து காக்க! 5**

ஊழிக் காலத்தில் மகாவிஷ்ணுவின் காதிலிருந்து இரண்டு அசுர்கள் பிறந்தார்கள். ஒருவன் மது, இன்னொருவன் கைடபன். இருவரும் மடமடவெனப் பெரியவர்களாக வளர்ந்தனர். அந்த நேரத்தில் உலகைப் படைக்கப் பிரம்மா தோன்ற வேண்டுமே! விஷ்ணு யோக நித்திரையில் ஆழ்ந்தார். அவருடைய நாபிக் கமலத்திலிருந்து ஒரு தாமரைத்தண்டு மேற்கிளம்பியது அதன் மேல் ஒரு தாமரை மலர் மலர்ந்தது. அதன் மேல் பிரம்மா தோன்றினார். மிக அழகிய வடிவொடு அமர்ந்திருந்தார். அப்பொழுது அங்கு வந்த மது கைடபர்கள் பிரம்மாவைப் பயமுறுத்தினர். பிரம்மா பயந்து நடுங்கினார். அந்த நடுக்கத்தால் தாமரைத் தண்டு ஆடியது. அந்த அசைவால் யோக நித்திரையில் இருந்த விஷ்ணு கண்விழித்தார். அவர் மது கைடபர்களைப் பார்த்து “உங்கள் வீரத்தைக் கண்டு மகிழ்ந்தேன். என்ன வரம் வேண்டும் என்று கேளுங்கள் “ என்றார். ஆணவத்தின் உச்சத்தில் இருந்த அவர்கள்” நீ எனக்கு வரம் கொடுப்பதா? நாங்கள் உனக்குத் தருகிறோம் வரம். என்ன வேண்டும் என்று கேள்” என்றனர்.” என்னால் மரணம் எய்த நீங்கள் உங்களைக் கொடுங்கள் “ என்றார் விஷ்ணு.
அவர்களுக்கு வேறு வழியில்லை. அப்பொழுது பிரளயத்தால் எங்கும் நீரே சூழ்ந்திருந்த சமயம். பூமியே இல்லை. எனவே “நீரில்லா வெற்றிடத்தில் நீ எங்களைக் கொல்லலாம்” என்றனர் . 5000 ஆண்டுகள் யுத்தம் தொடர்ந்தது. அப்பொழுது ஜகன்மாதா தோன்றி தனது மாயையினால் அவர்களை மயக்கினாள். விஷ்ணு விஸ்வ ரூபமெடுத்தார். நீருக்கு மேல் தொடைப்பகுதி இருந்தது. ஆடையில்லாத் வெற்றிடமாக அதை ஆக்கி அதன்மேல் மது கைடபர்களின் தலைகளை வைத்துச் சக்கரத்தால் கொன்றார். அவர்களுடைய உடலிலிருந்த மேதஸ் இறுகிப் பூமியாயிற்று. அதனால் பூமி மேதினி என்று பெயர் பெற்றது. அப்படி மதுவைக் கொன்ற திருமாலின் அழகிய மார்பில் கிடந்த ஆரத்தில் கோக்கப்பட்ட

நீலமணியைப்போல மின்னுகின்ற திருமகளின் கண்கள் எல்லா விதமான மங்கலங்களையும் அளிக்கட்டும் என வேண்டுகிறார் சங்கரர்.

எவரையேனும் வாழ்த்த வேண்டுமென்றால் இந்தப் பாடலைமட்டும் சொல்லி வாழ்த்தினால் போதும். அவர்களுக்கு எல்லா மங்கலங்களும் கிடைக்கும்.

**மதுவினை வென்றவன் தேவி வருவாள்**
**மங்கலம் அனைத்தையும் அள்ளித் தருவாள்**

---

**6 காலாம்புதாலிலலிதோரஸி கைடபாரே:**

**தாராதரே ஸ்புரதியா தடிதங்கனேவ|**

**மாது:ஸம்ஸ்தஜகதாம் மஹனீயமூர்த்தி:**

**பத்ரானி மே திசது பார்கவநந்தனாயா:||**

**கைடபன் தன்னைச் செற்ற கருமுகில் மார்பின் மீது**

**மெய்தவன் பார்கவன்தன் மென்மகள் மின்ன லாவாள்**

**வையகத் தாயாம் அந்த மலரவள் உருவம், நன்மை**

**செய்தருள் புரிக, மேலாம் செல்வங்கள் தந்து காக்க!**
6

*மது- கைடபர் இருவரும் ஒரே சமயத்தில் திருமாலின் காதிலிருந்து தோன்றியவர்கள். இதில் மதுவை விடக் கொடுமையானவன் கைடபன். அவனையும் தமது தொடைமீது வைத்து அழித்தார் மகாவிஷ்ணு. அப்படிக் கைடபனை வெற்றிகொண்ட திருமாலைத் தனது நேசத்தால் வெற்றிகொண்ட மஹாலக்ஷ்மி கருமுகில் போன்ற அவரது மார்பில் தலைவைத்துப் படுத்திருக்கிறாள். திருமால் நிறம் கார்வண்ணம். அதாவது கறுப்பு நிறம். திருமகளின் நிறமோ பொன்வண்ணம். மேகத்திற்கு மின்னலுக்கும் தொடர்புண்டு. மின்னலுக்கு ஆதாரமே மேகம்தான். திருமகள் திருமாலின் மார்பின் மீது படுத்திருந்த காட்சியானது கரிய மேகத்தின் மீது மின்னல் ஒன்று தவழ்ந்து*

*கிடந்ததைப் போல இருந்ததாம். மஹாலக்ஷ்மி பாற்கடலைக் கடைந்த போது அதிலிருந்து தோன்றியள் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் இங்கே சங்கரர் பார்கவன் தன் மென்மகள் என்கிறார். பார்கவன் என்பது பிருகு முனிவரின் பெயர். ஆம் மகாலக்ஷ்மி பிருகு முனிவருக்கும் அவரது மனைவி கியாதிக்கும் மகளாகப் பிறக்கிறாள் என்பதும் ஒரு வரலாறு. அதனாலே அவளுக்கு பார்க்கவி என்ற பெயரும் உண்டு.*
*கார்வண்ணன் ஆகத்தில் மின்னலாகப் படுத்துக்கிடக்கும் அவள்தான் இந்த வையத்துக்குத் தாய். மலரில் இருப்பவள். மலர்போன்ற மென்மையானவள். அந்தத் தெய்வீகத் தம்பதியின் ஆனந்தமயமான அந்த அருட் தோற்றமே காண ஆனந்தமாக இருக்கிறது. அவர்களுக்கு ஆனந்தம் என்றால் நமக்கும் ஆனந்தந்தானே! அம்மை நம்மைப் பார்க்கவேண்டிய அவசியமே இல்லை. அந்தத் தோற்றமே போதும் நமக்கு எல்லாச் செல்வத்தையும் அள்ளிக் கொடுத்துவிடும். அந்த உருவம் எல்லா நன்மைகளையும் கொடுக்கும். செல்வங்களுக் கெல்லாம் மேலான செல்வத்தைக் கொடுக்கும். நமக்கு அவற்றை நல்கி , நாம்பெற்றவை நிலைத்திருக்க அருள் புரிவாளாக என வேண்டுகிறார் பகவத் பாதர்.*

***ஆனந்தத் தோற்றம்***
***காண்பதே ஏற்றம்***

---

**7. ப்ராப்தம் பதம் ப்ரதமத:கலு யத்ப்ரபாவாத்**

**மாங்கல்யபாஜி மதுமாதினி மன்மதே ந|**

**மய்யாபதேத் ததிஹ மந்தரமீக்ஷணார்தம்**

**மந்தாலஸ ம் ச மகராலய கன்னிகாயா:||**

**சீலமில் மதுவை வென்ற தேவனை, முதன்மை யானை**
**மாலவன் தன்னை வெல்லும் வன்மையை மன்ம தற்குச்**
**சாலவே தந்த வெற்றித் தாயவள் கடைக்கண் வீச்சு**
**கோலமாய் என்மேல் சற்றே கூடுக , நயந்து காக்க! 7**

ஒருவரிடம் ஒரு காரியத்தைச் சாதித்துக்கொள்ளவேண்டுமெனில் அவரைக் கொஞ்சம் கூடுதலாக முகஸ்துதி செய்தால் போதும். காரியம் கைகூடிவிடும். மதுவரக்கனை வென்று வெற்றி வீரனாகத் திகழும் திருமாலை திருமகள் இரண்டு விதத்திலே வென்றிருக்கிறாளாம். ஒன்று நேசத்தால் வென்று அவனைத் தனக்கு ஆட்படுத்திக் கொள்ளுதல். இன்னொருவன் திருமாலை வெற்றி கொள்ள மன்மதனுக்கு உதவி புரிந்து அந்தச் செயலில் வெல்கிறாள். தேவர்கள் என்றும் இளமையானவர்கள். அவர்களுக்கு எத்தனை பிள்ளைகள் பிறந்திருந்தாலும் அவர்கள் இளமையானவர்களே! மாலின் மேல் கொண்ட காதலால் திருமகள் அவனை வசியம் செய்ய முனைகிறாள். அதற்குக் காமனைத் துணைக்கு அழைக்கிறாள். காமன் ஏற்கனவே சிவ பெருமான் விஷயத்தில் பஸ்மாகிப் போய் மீண்டும் உயிர்த்தெழுந்தவன். எனவே திருமாலிடத்தும் தன் வேலையைக் காட்ட. விரும்பவில்லை. திருமாலின் பிள்ளை மன்மதன். தந்தையிடமே தன் வேலையைக் காட்டலாமா? ஆனால் தேவி விடுவதாக இல்லை. வசியம் செய்வது அவனுக்கு இறைவனால் கொடுக்கப்பட்ட பணி. அதை அவன் செய்ய மறுத்தால் கடமையில் தவறியவ னாவான். அவன் தன் பணியையும் செய்ய வேண்டும். ஆனால் அதே சமயம் அவனுக்கு எதுவும் நேரக்கூடாது. எனவே திருமகள் மன்மதனிடம் ," நீ கவலைப்படாதே, அவரை வெல்லுகிற திறமையை உனக்குப் பரிசாக நான் கொடுக்கிறேன்" என்கிறாள். பிறகென்ன? மன்மதன் திருமாலிடம் தன் வேலையைக் காட்டுகிறான். அவரை வெற்றி கொள்ளுகிறான். எனவேதான் மாலவன் தன்னை வெல்லும் வன்மையை மன்மதற்குச் சாலவே தந்த வெற்றியை உடையவள் என்கிறார்.

இந்தச் சமயத்தில் நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் மன்மதனை வணங்கி வேண்டும் பாடல்களில் ஒன்றிரண்டை நினைவு கூர்வது நல்லது

தையொரு திங்களும் தரைவிளக்கித் தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்,

ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து அழகினுக் கலங்கரித் தனங்க தேவா,

உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி உன்னையு மும்பியை யும்தொழுதேன்,

வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே

மன்மதன் தன் அம்சமான பிரத்யும்னனாகக் கண்ணனுக்கும் ருக்மணிக்கும் பிறந்தவன். கண்ணனின் இன்னொரு மனைவி ஜாம்பவதி தேவி மூலம் சாமன் என்பவன் பிறக்கிறான். ஆண்டாள் வேங்கடவனோடு தன்னை இணைத்து வைப்பதற்கு வேண்டியன செய்யும் படி மன்மதனை வேண்டுகிறாள். அதற்காக உன்னை மட்டுமல்ல உன் தம்பியையும் வேண்டுகிறேன் என்கிறாள். தைமாதம் முழுதும் தரையைச் சுத்தம் செய்து மாசித் தொடக்கத்தில் , மன்மதா , நீ வரவேண்டும் உனக்குக் காலுக்கு இதமாக இருக்கவேண்டும் என்பதற்காக மிக நுண்மையான மணலை வீதியில் பரப்பி வைத்து , வேங்கடவனோடு என்னைச் சேர்த்துவைக்கும் படி உன்னையும் உன் தம்பியையும் தொழுகிறேன் என்கிறாள் ஆண்டாள்.

இன்னொரு அருமையான பாடல்

வானிடை வாழுமவ் வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்தஅவி,

கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப,

ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்று உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்,

மானிட வர்க்கென்று பேச்சுப்படில் வாழகில் லேன்கண்டாய் மன்மதனே .5

மன்மதா, நான் உயிரோடு வாழவேண்டும் என்று நீ நினைத்தாயானால் நீ என்னை ஆழி சங்கு உடைய உத்தமரிடம் சேர்த்துவிடவேண்டும். என்னுடைய நிமிர்ந்த கொங்கைகள் அவை வளரத் தொடங்கிய பிராயந் தொடங்கி துவரைப் பிரானுக்கே உரியவை என்று சங்கற்பித்து விட்டேன் அந்தச் சங்கற்பத்தால் அவை அவனுக்கே உரியன , அவனுடைய சொத்து என்று அவற்றையும் வணங்குகின்றேன். அப்படியிருக்கையில், வேள்வியில் வகுத்த அவியை கள்ள நரி

தாண்டிச் செல்வதும் மோந்து பார்ப்பதும் போன்று மானிடற்குத் திருமணம் செய்து வைக்கப் பேசினால் நான் உயிரோடு இருக்கமாட்டேன். இதைக் கருதி நீ எனக்கு உதவி செய். உன் அம்பில் அவர் பெயரை எழுதி விடு என்று கெஞ்சுகிறாள். இலக்குமி எந்த உருவத்தில் இருந்தாலும் மன்மதனுக்கு வெற்றி கிடைத்துவிடுகிறது. எனவே திருமாலை வெல்லும் திறமையை மன்மதர்க்குக் கொடுத்த அந்தத் தாயின் கடைக்கண் பார்வை என்மேல் சற்றே விழுந்து ல்வம் அருளி என்னைக் காக்கட்டும் என்கிறார் பகவத்பாதர்.

---

**மன்மதனை வெல்லவைத்த மாதா–எங்கள்**
**வாழ்வுயரத் திருவள்ளித் தாதா!**

***

**8 தத்யாத் தயாநு பவநோ த்ரவிணாம் புதாராம்**
**அஸ்மிந் நகிஞ்சந விஹங் கஸிசௌ விஷண்ணே**
**துஷ்கர்ம மகர்மம பநீய சிராய தூரம்**
**நாராயணப் பரணயிநீ நயநாம்பு வாஹ: (9**

**சாதகப் பறவைக் குஞ்சு தகிக்கிற வினை வெப்பத்தால்**
**வேதனைப் பட்டு மிக்க மெலிவதோ? நாரணன்தன்**
**காதலி கண்கார் மேகம் கருணையாம் காற்று வீசப்**
**பாதக வெப்பம் போக்கிப் பணமழை பெய்து காக்க!**
**8**

சாதகப் பறவை, அல்லது சக்கரவாகப் பறவை அல்லது சுடலைக்குயில் என்றெல்லாம் அழைக்கப்படும் பறவை எவ்வளவுதான் தாகம் எடுத்தாலும் வானத்திலிருந்து வீழும் மழை நீரையன்றிப் பூமியில் கிட்டும் எந்த நீரையும் அருந்தாது. வானத்தை நோக்கி அலகைத் திறந்துவைத்துப் பறக்குமாம்.

இந்தப் பாடலில் மட்டுந்தான் மறைமுகமாகத் தனக்கு நெல்லிக்கனி ஈந்த அந்தப் பெண்மணிக்கு நீ செல்வத்தை மழையாகப் பொழிய வேண்டும் என்று சொல்கிறார் பகவத் பாதர். நேரடியாகச் சொல்லவில்லை. கனகதாராவில் வேறு எந்தப் பாடலிலும் இந்தவிதமான குறிப்பு இல்லை.

தேவி, சாதகப் பறவைக் குஞ்சு ஒன்று தனது பூர்வ ஜென்ம வினை வெப்பத்தால் வேதனைப் பட்டுக்கொண்டு வானை நோக்கி அலகைத் திறந்து பறந்து கொண்டிருக்கிறது. அது அந்த வினை வெப்பத்தில் வேக விடுவது நல்லதா?

அம்மா கார்மேக வண்ணனின் காதலி நீ. உன் கண்களும் கார்மேகம் போன்றவைதான். மழை மேகம் இங்கே பெய்யலாம் இங்கே பெய்யக் கூடாது என்று பார்த்துப் பெய்வதில்லை. கருணை மிக்க கார்மேகம் போன்ற கண்களைக் கொண்ட தாயே உன்னுடைய கருணையாம் காற்று வீசட்டும் .கார்மேகமாகிய உன் கண்கள் பாதக வெப்பத்தைப் போக்கிப் பண மழை பொழிந்து காக்கட்டும் என்கிறார் பகவத் பாதர்.

இந்தப் பாடலில் “அம்மா நீ எனக்குக் கொடுக்கிற செல்வத்தை மடைமாற்றும் சங்கற்பமுடையவன் என்றாலும் நீ நேரடியாக் கொடுப்பது போல் வருமா , எனவே அந்தப் பெண்மணிக்கு நேரடியாக நீயே கொடு தாயே “ என்பதை நேரடியாகச் சொல்லாமல் மறைமுகமாகச் சொல்லிவிடுகிறார்.

**சாதகப்ப றவை போலத் தவிக்கிறாள் தாயே**
**தாகத்தைத் தீர்க்கமழை யாகவரு வாயே!**

***************



**9 இஷ்டா விசிஷ்ட மதயோபி யயா தயார்த்ர**

**த்ருஷ்ட்யா த்ரிவிஷ்ட பபதம் சுலபம் லபந்தே**

**திருஷ்டி: ப்ரஹ்ற ருஷ்ட கமலோதர தீப்திரிஷ்டாம்**

**புஷ்டிம் க்ருஷீஷ்ட மம புஷ்கர விஷ்டராயா: (8)**

**எத்துணை யேனும் வேள்வி இயற்றிடா மக்க ளுக்கும்**

**முத்தியை அளிக்கும் அன்னை முகிழ்கடைக் கண்ணின் வீச்சு**

**சித்திரக் கமலப் பூவின் சீரிடைப் பகுதி போன்ற**

**உத்தமக் கண்ணின் பார்வை உயர்வெலாம் அளித்துக் காக்க! 9**

எல்லா ஞானிகளுமே முக்தி வேண்டும் என்று சொல்கிறார்கள். முக்தி பெறுவதற்கான வழிகள் என்ன? பல பெரியவர்கள் சொல்லுகிற வழிகளைப் பார்த்தால் அது அப்படியொன்றும் எளிதில்லை என்று தோன்றுகிறது, அவர்கள் சொல்லுவது

1 பல வேள்விகளைச் செய்தல்- இது எல்லோராலும் செய்யக் கூடிய காரியமில்லை.

2 காட்டில் இருந்துகொண்டு எல்லாவற்றையும் துறந்துவிட்டுத் தவம் செய்வது. அது அவ்வளவு எளிதா என்ன? அந்த நிலையிலும் வாழ்க்கை விசாரங்கள் வராது என்பது என்ன நிச்சயம்?

3இராஜ யோகம் - இதுவும் அவ்வளவு எளிதல்ல. எல்லா வயதினரும் இதைச் செய்ய முடியும் என்று தெரியவில்லை.

3 ஞான விசாரம். நான் யார் என்பதிலிருந்து தொடங்கி வேதாந்த விசாரங்கள் செய்வது. விசாரம் இருக்குமே தவிர விசாரங்கள் செய்வது அவ்வளவு எளிதல்ல.

இப்படி எதுவுமே இல்லாமல் ஆத்மார்த்தமான பக்தியின்மூலம் திருமகளின் கடைக்கண் பார்வைக்கு ஆளாகி விட்டால் போதும். முக்திதான்

எத்துணை யேனும் என்றால் எள் அளவேனும் என்று பொருள். கொஞ்சங்கூட வேள்வி செய்யாத மக்களுக்கும் திருமகளின் கடைக்கண்பார்வை முக்தியை அளித்துவிடும்.

அவளுடைய கண்கள் தாமரை மலரின் இடைப்பட்ட பகுதியிலுள்ள இதழ் போல நீண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட கண்ணின் பார்வை எல்லா விதமான உயர்வுகளையும் அளித்துக் காக்கட்டும்

**அம்மா நின் கடைக்கண்ணின் பார்வை**
**அது கிட்டத் தீரும் பணத் தேவை**

****

**10. கீர்தேவதேதி கருடத்வஜஸுந்தரீதி**

**சாகம்பரீதி சசிசேகர வல்லபேதி|**

**சிருஷ்டிஸ்திதி ப்ரலய கேலிஷு ஸம்ஸ்திதாயை**

**தஸ்யை நம:த்ரிபுவணே குரோஸ் தருண்யை ||**

**படைக்கையில் வாணி, காக்கும் பணியினில் லக்ஷ்மி, தீர்வு**

**கொடுக்கையில் திங்கள் சூடும் கூத்தனின் தலைவி என்ன**

**எடுக்கிற முத்தொழில்கள் இயற்றுவாள், உலகம் மூன்றும்**

**நடத்திடும் நாரணன்தன் நாயகி, வணங்குகின்றேன்.**

திருமகள் தனியாகக் காக்கும் பணியைச் செய்தாலும் அவள்தான் மூன்று பெருந்தேவியர்களாக இயங்குகிறாள்..இந்தப் பாடலில் முத்தொழில்களும் முறையே தேவியருக்கு ஏற்றிச் சொல்லப் பட்டிருக்கின்றன. பிரம்மனின் மனைவியாகிய வாணி படைப்பதாகவும், திருமாலின் மனைவியாகிய திருமகள் காப்பதாகவும், சிவனின் மனைவி யாகிய, சாகம்பரீ என்று சொல்லப்படுகின்ற தானியங்கள், மற்றும் காய்கறி களுக்குத் தலைவியாகிய பார்வதி தேவி அழிப்பதாகவும் இங்கே சொல்லப் படுகிறது. மூவரும் தனித்தனியாகச் சொல்லப் பட்டாலும் திருமகளே முப்பெருந் தேவியராக விளங்கி அவர்களின் தொழில்களையும் தாமே செய்வதாக இங்கே சொல்லப்படுகிறது படைக்கிற போது வாணியாகவும் காக்கிற போது லக்ஷ்மியாகவும் அழிக்கிற போது சாகம்பரீயாகவும் தானே விளங்குகிறாள். முத்தொழில்களையும் தானே இயற்றுகிறாள்.

அவளுடைய கணவனாகிய திருமாலோ மூன்று உலகத்தின் இயக்கத்தையும் தானே நடத்துகிறான். இப்படி மூன்றுலக நாயகனின் மனைவியாகி முத்தொழில்களையும் தானே இயற்றுகிற திருமகளை நான் வணங்குகிறேன். முத்தொழில்களையும் செய்பவள் நம்மையும் காக்க மாட்டாளா? காப்பாள்.

அடுத்து வருகின்ற ஐந்து பாடல்களும் போற்றிப் பாடல்கள். அர்ச்சனை செய்வது போல அமைந்த பாடல்கள்.

**மலலைமகள்நீ, கலைமகள்நீ திருமகள்நீ உன்னை**
**மனதார வண்ங்குகிறேன் நீயென்றன் அன்னை**

*************

**11. ஸ்ரீ§த்யை நமோஸ்து சுபகர்மபலப்ரஸ¨த்யை**

**ரத்யை நமோஸ்து ரமணீய குணர்ணவாயை||**

**சக்த்யை நமோஸ்து சதபத்ர நிகேதநாயை**

**புஷ்ட்யை நமோஸ்து புருஷோத்தம வல்லபாயை||**

**நற்பயன் நற்செயற்கு நல்குவாள் நாமம் போற்றி**
**அற்புதக் குணத்தின் வேலை அழகிய ரதிதாள் போற்றி**
**பொற்புடைக் கமலம் வாழும் புனிதமாம் சக்தி போற்றி**
**முற்பொருள் ஆண்தகை மால் முகுந்தனின் தேவி போற்றி** 11

நம்மில் பலருக்கு வரம் கேட்கத் தெரியாது. இறைவனே நேரில் வந்து உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டால் நான் நினைப்பதெல்லாம் நடைபெற வேண்டும் என்று கேட்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அது கிட்டிவிடின் இந்த மனம் தள்ளாட்டம் போடும். . நினைக்கக் கூடாதன வெல்லாம் நினைத்துத் தனக்கே அழிவைத் தேடிக் கொள்ளும். இன்னொருவன் நான் செய்வன வெல்லாம் வெற்றி யடையவேண்டும் என்று கேட்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் செய்கிற செயல்களெல்லாம் நல்ல செயலாக

இருக்கும் என்று சொல்ல முடியுமா?. தீச்செயல்களும் வெற்றியடைந்தால் அவனுக்கு மட்டுமல்ல யாருக்காகச் செய்யப்படுகிறதோ அவர்களுக்கும் அழிவைக் கொடுக்கும். நான் எழுதியுள்ள "எண்ணிரண்டும் நல்கவே" என்னும் அனுமன் துதியில் " கேட்டாலும் எது சரியோ அதை அள்ளித் தரவேண்டும், கேளாத போதும் எதுசரி அதைத் தரவேண்டும்" என்று எழுதியிருந்தேன். திருமகள் என்ன செய்வாளாம். அடியவன் நல்ல செயல்களைச் செய்தால் அச்செயல்களுக்கு நல்ல பலன்களைத் தருவாளாம். அதனால் நல்ல செயல்களைச் செய்ய வேண்டியது அவசியம், எது நல்ல செயல் எது அல்லாத செயல் என்பது கூட நமக்குத் தெரியாது. அதை அவள் பார்த்துக் கொள்வாள். அதனால் தான் சங்கரர் "நற்பயன் நற்செயற்கு நல்குவாள் நாமம் போற்றி. நாமம் போற்றி என்று சொன்னதிலும் ஒரு விசேஷம் இருக்கிறது. நாமியை விட நாமம் மிகவும் சக்தி வாய்ந்தது என்று சொல்வார்கள். இதற்குச் சான்றாகப் பல எடுத்துக் காட்டுகள் உண்டு. சேதுவில் அணை கட்டிய போது அனுமன் ஒவ்வொரு கல்லிலும் இராம என்று எழுதிப் போட்டாராம். கற்கள் மிதந்தன. இதைப் பார்த்த இராமன் தான் ஒரு கல்லை எடுத்துப் போட்டாராம். கல் அமிழ்ந்து விட்டது. வேறொரு கல்லில் இராம என்று அனுமன் எழுத அதை எடுத்து இராமன் போட அது மிதந்ததாம். நாமத்தின் சிறப்பைக் கருதி இங்கே சங்கரர் திருமகளின் நாமம் போற்றி என்கிறார்.

இந்தப் பாடலில் நான்கு போற்றிகள் வருகின்றன.

அடுத்த போற்றி

அற்புதக் குணத்தின் வேலை அழகிய ரதிதாள் போற்றி. தெய்வத்தின் குணத்தைப்பற்றிச் சொல்லும் போது எண்குணம் உடையதாகச் சொல்லப்படுவதுண்டு.

**கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை**

என்கிறார் வள்ளுவர். திருமகளைக் குணங்களின் கடல் என்கிறார் சங்கரர். எண்குணங்கள் யாவை என்பதில் பலரும் பல கருத்துகளைச் சொல்கிறார்கள்.. கல்யாண குணங்கள் என்றும் சொல்லப்படுவதுண்டு. எண் என்பதற்கு நல்லனவான எண்ணப்படுகின்ற குணங்கள் என்றும் சொல்வதுண்டு. எட்டுக்குணங்கள் என்பதற்குப் பலவிதமான வியாக்யானங்கள் உண்டு. திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர்

1. தன்வயத்தன் ஆதல்
2. தூய உடம்பினன் ஆதல்
3. இயற்கை உணர்வினன் ஆதல்
4 முற்றும் உணர்தல்
5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
6. பேரருள் உடைமை
7. முடிவு இல் ஆற்றல் உடைமை
8. வரம்பு இல் இன்பம் உடைமை

என்று சொல்கிறார். இன்னொரு உரையாசிரியர் பரிதியார்

1. அனந்த ஞானம்
2. அனந்த வீரியம்
3. அனந்த குணம்
4. அனந்த தெரிசனம்
5. நாமமின்மை
6. கோத்திரமின்மை
7. அவாவின்மை
8. அழியாவியல்பு

எனக்குறிப்பிடுகிறார். பௌத்த பரமாக

நன்மொழி) Right Speech), 2. நற்செயல்) Right Conduct), 3. நன்னெறி) Right Livelihood), 4. நன்முயற்சி) Right Effort), 5.

**நல்லெண்ணம்**) Right Mindfulness), 6. **நல்லறம்**) Right Intention), 7. **நல்நோக்கம்**) Right View), 8. **நல்லறிவு**) Right Insight) **ஆகியன** எண்குணங்கள் எனச் சொல்லப்படுகிறன. எது எப்படியாகினும் மிகச்சிறந்த குணங்களின் கடலாகத் திருமகள் விளங்குகிறாள் எனக் கொள்ளலாம். அழகிலே சிறந்தவள் ரதி எனச் சொல்லப்படுகிறது. திருமகளை அழகிய ரதி என்கிறார் சங்கரர்

அற்புதக் குணத்தின் வேலை அழகிய ரதிதாள் போற்றி

மூன்றாவது போற்றி-

பொற்புடைக் கமலம் வாழும் புனிதமாம் சக்தி போற்றி.

திருமகளே சக்தியாகவும் விளங்குகிறாள் என்பதை 10 வது பாடலில் பார்த்தோம். பொன்மயமான தாமரைப்பூவில் வாழ்கிறாள். தாமரைப்பூவிற்கென்று பல சிறப்புகள் உண்டு. வெள்ளத்தனையது மலர் நீட்டம் என்பது போல நீரிருக்கும் உயரத்திற்கே அது இருக்கும். எப்பொழுதும் கழுத்தளவு தண்ணீரில் நின்று கொண்டு தவம் செய்து கொண்டிருக்கும். நன்கு முற்றிய தாமரைப்பூ நடுவிலே தாமரை மணிகளைக் கொண்டிருக்கும்.இதழ்கள் வெவ்வேறாக இருந்தாலும் அடிநாதமாகத் தண்டோடிணைந்து வேற்றுமையில் ஒற்றுமையைக் காட்டிக் கொண்டிருக்கும். நீர்மட்டத்திற்கு மேலுள்ள இதழ்களில் ஒருவிதமான எண்ணெய்ப் பசை அமைந்து நீரோடு ஒட்டாமல் பட்டும் படாமல் இருக்கும் வாழ்வைப் பறைசாற்றிக் கொண்டிருக்கும். நீரில் இருக்கும் ஆனால் அழுகாது. அப்படிப்பட்ட புனிதமான செந்தாமரை மலரில் திருமகள் வீற்றிருக்கிறாள். அப்படிப் பொன்மயமான தாமரைப் பூவில் வீற்றிருக்கும் புனிதம் நிறைந்த சக்தியே போற்றி என்கிறார்

நான்காவது போற்றி

முற்பொருள் ஆண்தகைமால் முகுந்தனின் தேவி போற்றி

புருஷோத்தமன் என்றால் ஆண் தகைமால். அதாவது ஆண்களிலேயேஉத்தமன். திருமால் ஒருவன் தான்

புருஷோத்தமன். மற்ற ஆண்களெல்லாம் ஆண்களென்று சொல்லப்படுபவர்கள் என்று கூறப்படுவதுண்டு. புருஷோத்தமனின் தேவியாகிய புஷ்டி தேவியே போற்றி என்கிறார் சங்கரர்.

இந்த நான்கு போற்றிகளையும் சேர்த்துச் சொல்லும் போது அதில் ஒரு நயமிருக்கும்

**நற்பொருள் நற்செயற்கு நல்குவாள் நாமம் போற்றி**
**அற்புதக் குணத்தின் வேலை அழகிய ரதிதாள் போற்றி**
**பொற்புடைக் கமலம் வாழும் புனிதமாம் சக்தி போற்றி**
**முற்பொருள் ஆண்தகைமால் முகுந்தனின் தேவி போற்றி!**

**இடர்தரும் நிலையெல்லாம் மாற்றி**
**ஏற்றம் கொடுப்பவளே போற்றி**

****

**12. நமோஸ்து நாலீக நிபானனாயை**

**நமோஸ்து துக்தோததி ஜன்ம பூம்யை|**

**நமோஸ்து ஸோமாம்ருத ஸோதராயை**

**நமோஸ்து நாராயண வல்லபாயை||**

**பங்கய முகத்தாள் போற்றி, பாற்கடல் முளைத்தாள் போற்றி**

**திங்களும் அமுதும் அந்தத் திருக்கடல் எழுந்த தாலே**

**தங்குல உடன்பிறப்பாய்ச் சார்ந்திடக் கொண்டாள் போற்றி**

**மங்கல நாரணன் தன் மனமகிழ் தேவி போற்றி**
**12**

திருமகளின் முகம் செந்தாமரையைப் போல அழகாக அமைந்திருக்கிறது. அமுதம் கடைகிற போது பாற்கடலிலிருந்து எழுந்து வந்தவள் அவள். எனவே தான் பங்கய முகத்தாள் போற்றி பாற்கடல் முளைத்தாள் போற்றி என்கிறார்

சந்திரனுக்கும் திருமகளுக்கும் சகோதர உறவுமுறை உண்டு.
திருமகளைப் போலவே சந்திரனும் பாற்கடலிலிருந்து வந்தவன்.
அமுதமும் பாற்கடலிலிருந்து வந்தது. எனவே அமுதத்தையும் தனக்கு உறவு முறையிலேயே கருதுகிறாள் திருமகள்.
திங்களும் அமுதும் அந்தத் திருக்கடல் எழுந்ததாலே
தங்குல உடன்பிறப்பாய்ச் சார்ந்திடக் கொண்டாள் போற்றி என்கிறார்.
நாரணன் மனம் மகிழ்ந்து அன்புசெலுத்தக் கூடிய அவனின் தேவியே போற்றி என வழுத்துகிறார் சங்கரர்

பங்கய முகத்தாள் போற்றி, பாற்கடல் முளைத்தாள் போற்றி

திங்களும் அமுதும் அந்தத் திருக்கடல் எழுந்த தாலே

தங்குல உடன்பிறப்பாய்ச் சார்ந்திடக் கொண்டாள் போற்றி

மங்கல நாரணன் தன் மனமகிழ் தேவி போற்றி

**செங்கமலத் திருமுகத்தாள் தேவி - அந்தத்**
**திருமகளே காக்கிறாள் நம் ஆவி**

13 **நமோஸ்து ஹேமாம்புஜ பீடிகாயை**
**நமோஸ்து பூமண்டல நாயிகாயை**
**நமோஸ்து தேவாதி தயாபராயை**
**நமோஸ்து ஸார்ங்காயுத வல்லபாயை**

**பொன்மயத் தாமரைப்பூ பொருந்திடும் அன்னை போற்றி**
**மன்னுபூ மண்டலத்தின் மாண்புடைத் தலைவி போற்றி**
**தன்பெரும் தேவர்கட்குத் தண்ணளி செய்வாள் போற்றி**
**இன்னருஞ் சார்ங்க வில்லை ஏந்துவான் தேவி போற்றி**
**13**

பொன்மயமான தாமரைப்பூவில் அமர்ந்திருக்கும் தேவியே! உன்னைப் போற்றுகிறேன். இந்தப் பூமண்டலத்தில் உள்ள மனிதர்களை மட்டுமா நீ காப்பாற்றுகிறாய். எல்லா உயிரினங்களுக்கும் சேதன அசேதனப் பொருள்களுக்குமல்லவா நீ தாயாக விளங்குகிறாய்! .உன் சங்கல்பத்தால் தானே இந்த உலகம் ஓடுகிறது. இயக்கங்கங்கள் ஒழுங்காகச் செல்லுகின்றன. தாயே உன்னைப் போற்றுகிறேன். பூமண்டலம் மட்டிலுமா? வானுலகமே உனது உத்தரவு கேட்டுத்தானே இயங்குகின்றது என்கிறார் சங்கரர். அகத்தியர் தனது மகாலக்ஷ்மி துதியில் இதை அருமையாகச் சொல்கிறார்- அதிவீராமபாண்டியன் அத்துதியை மிக அருமையாக மொழியாக்கம் செய்திருக்கிறார்.

மடற்கமல நறும்பொ குட்டில் அரசிருக்கும்
செந்துவர்வாய் மயிலே மற்றுன்
கடைக்கணருள் படைத்தன்றோ மணிவண்ணன்
உலகமெலாம் காவல் பூண்டான்
படைத்தனன்நான் முகக்கிழவன் பசுங்குழவி
மதிபுனைந்த பரமன் தானும்
துடைத்தனன்நின் பெருஞ் சீர்த்தி எம்மனோ
ரால் எடுத்துச் சொல்லற் பாற்றோ.

மும்மூர்த்திகளும் அவளால் இயக்கப் படுகின்றனராம். தேவர்களுக்கு ஒளிகொடுப்பவள் திருமகள் என்கிறார் அகத்தியர்

செங்கமலப் பொலந்தாதில் திகழ்ந்தொளிரும்
எழின்மேனித் திருவே வேலை
அங்கண்உல கிருள்துரக்கும் அலர்கதிராய்
வெண்மதியாய் அமரர்க் கூட்டும்
பொங்கழலாய் உலகளிக்கும் பூங்கொடியே
நெடுங்கானில் பொருப்பில் மண்ணில்
எங்குளைநீ அவணன்றோ மல்லல்வளம்
சிறந்தோங்கி இருப்ப தம்மா.

திருமால் வைத்திருக்கும் வில்லுக்கு சார்ங்கம் என்று பெயர். அவன் கோவிந்தனாக இருக்கும் போது அவனுடைய ஆயுதம் சார்ங்கம். அவன் சாரங்கபாணி. அவனது பன்னிரண்டு திருநாம மூர்த்திகளுக்கும் தனித்தனியே ஒரு ஆயுதம் உண்டு.

1.சக்கரம் - கேசவா
.2சங்கு – நாராயணா
3கதை - மாதவா
.4சார்ங்கவில் - கோவிந்தா
.5கலப்பை - விஷ்ணு
.6உலக்கை - மதுசூதனா
.7குறுவாள் - த்ரிவிக்ரமா
.8வஜ்ராயுதம் - வாமனா
.9பட்டாகத்தி - ஸ்ரீதரா
.10மரச்சுத்தி - ஹ்ரிஷிகேசா
.11தாமரை - பத்மநாபா
.12பாசக்கயிறு - தாமோதரா
ஆதாரம்:
த்வாதசநாமபஞ்ஜர ஸ்தோத்ரா

**சார்ங்கவில்லை வைத்திருக்கும் கோவிந்தனின் துணைவியே போற்றுகிறேன்**
**இன்னரும் சார்ங்கவில்லை ஏந்துவான் தேவி போற்றி**

**பொன்மயத் தாமரைப்பூ பொருந்திடும் அன்னை போற்றி**

**மன்னுபூ மண்டலத்தின் மாண்புடைத் தலைவி போற்றி**

**தன்பெரும் தேவர்கட்குத் தண்ணளி செய்வாள் போற்றி**

**இன்னருஞ் சார்ங்க வில்லை ஏந்துவான் தேவி போற்றி**
13

தாமரைப் பூவினில் தங்கிடும் அன்னை
தண்ணளி செய்து காக்கட்டும் என்னை

**14 நமோஸ்து தேவ்யை ப்ருகு நந்தநாயை**

**நமோஸ்து விஷ்ணோருரஸி ஸ்திதாயை**

**நமோஸ்து லக்ஷ்ம்யை கமலாலயாயை**

**நமோஸ்து தாமோதர வல்லபாயை**

பிருகுமா முனிவன் பெற்ற பெண்மணி போற்றி, ஆதிப்

பெருந்தகை திருமால் மார்பில் பீடுடன் அமர்ந்தாள் போற்றி

முருகவிழ் தாமரைப்பூ முகிழ்த்திடும் தேவி போற்றி

பெருகு தாமோதரன்தன் பெருந்துணை போற்றி போற்றி
14

பிருகு முனிவருக்கும் கியாதி அம்மைக்கும் திருமகளாக இலக்குமி பிறந்தாள் என்று ஏற்கனவே பார்த்திருக்கிறோம். பாற்கடலிலே இருந்து வந்தவள் பிருகு முனிவன் மகளாகப் பார்கவி ஆனாள். அவளைப் போற்றுகிறோம். திருமாலுடைய மார்பில் இடம்பிடித்துக் கொண்டு மிகவும் பெருமையுடன் வீற்றிருக்கிறாள். திருமாலுக்கு மூன்று தேவியர் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீ தேவி, பூதேவி, நீளாதேவி. ஸ்ரீதேவியாகிய திருமகள் திருமாலின் மார்பில் நிரந்தர இடம்பிடித்துக் கொண்டிருக்கிறாள்

அந்தத்திருமகளைப் போற்றுகிறோம். தாமரைப்பூவிற்கும் திருமகளுக்கும் உள்ள தொடர்பை ஏற்கனவே பார்த்திருக்கிறோம். தாமரைப் பூவோடு தொடர்புடைய பெயர்கள் திருமகளுக்கு உண்டு. பரமாச்சார்யார் இதைப்பற்றி விளக்கமாகச் சொல்கிறார்

**“லக்ஷ்மிக்கு தாமரைப்பூ ஸம்பந்தம் ரொம்பவும் ஜாஸ்தி.**

**பத்மப்ரியே பத்மினி பத்ம ஹஸ்தே**
**பத்மாலயே பத்ம தளாயதாக்ஷி**

என்று அவளை ஸ்தோத்ரம் செய்வார்கள். அவளுக்கு தாமரைப் பூவிடம் ப்ரியம் அதிகம். ஆகையால் “பத்மப்ரியே!” பத்மினி என்றால் தாமரைக்கொடி. மஹாலக்ஷ்மி இப்படித்தான் ஸௌகுமார்யத்தால் துவண்ட கொடியாக இருக்கிறாள். பெண்களில் உத்தமமான லக்ஷணம்

உடையவர்களை 'பத்மினி ஜாதி' என்பதே வழக்கம். 'பத்மினி' என்றால் பத்மங்களை உடையவள் என்றும் அர்த்தம் செய்துகொள்ளலாம்.

லக்ஷ்மி நித்யவாஸம் செய்வதாக ஐந்து இடங்கள் உள்ளன. தாமரைப் பூவின் மத்தி ,யானையின் மஸ்தகம் (தலை) , பசுவின் பின்புறம் , வில்வ இலையின் பின்பக்கம் ,ஸுமங்கலிகளின் ஸீமந்தம் (வகிடு) என்பவை இந்த ஐந்து .இப்படி ஐந்து இருந்தாலும் எல்லாருக்கும் தெரிந்தது அவள் தாமரைப்பூவில் உட்கார்ந்திருக்கிறாள் என்பதுதான். படங்களில் அப்படியே போட்டிருக்கிறது .சில்பங்களும் அப்படித்தான் இருக்கின்றன. அதனால்தான் "பத்மாலயே!" என்றது.

அவளுடைய நான்கு கைகளில் இரண்டில் இரண்டு தாமரைப்பூவை வைத்துக் கொண்டிருக்கிறாள். ஆகையால் "பத்மஹஸ்தே!" அவளுடைய கண்கள் விரிந்த தாமரை இதழ்போல இருக்கின்றனவாதலால் "பத்மதளாயதாக்ஷி". அவளுடைய முகமும் தாமரை போன்றது. இந்த ச்லோகத்தில் அதைச் சொல்லாவிட்டாலும் (லக்ஷ்மி) அஷ்டோத்தரத்தில் "பத்ம முகி" என்று இருக்கிறது.

பத்ம ஸம்பந்தமாகவே அதிலும் அநேகம் பெயர்களைச் சொல்லியிருக்கிறது .தாமரைப் பூவாலேயே மாலை போட்டுக் கொண்டிருக்கிறாளாம் – "பத்ம மாலாதரா". அவளுடைய திவ்ய தேஹம் தாமரை போன்ற வாஸனை வீசுகிறதாம் – "பத்ம கந்திநி". இவள்" பத்ம ப்ரியா"வாகத் தாமரையிடம் ப்ரியம் வைத்துள்ளது போல இவளிடம் ப்ரியம் வைத்திருப்பது யாரென்று பார்த்தால் அது நாபியிலேயே ஒரு தாமரையை மலர்த்திக் கொண்டிருக்கிறவனாக இருக்கிறது - "பத்மநாபப் ப்ரியா" என்று அஷ்டோத்தரம் சொல்கிறது.

'பத்மாவதி' ,'கமலா' ,'அம்புஜா' ,'பங்கஜா' என்றெல்லாம் தாமரையை வைத்தே லக்ஷ்மிக்குப் பெயர்கள் இருக்கின்றன .
அப்படித் தாமரை வடிவாக விளங்குகின்ற லக்ஷ்மியைப் போற்றுகின்றோம் அடுத்த போற்றியாக வருவது
பெருகு தாமோதரன் தன் பெருந்துணை போற்றி போற்றி. திருமாலின் பன்னிரு திருநாமங்களில் இறுதி நாமமாக வருவது தாமோதரன்

தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன் என்கிறாள் ஆண்டாள். வளர்ப்புத்தாய் ஆகிய யசோதை குழந்தை கண்ணனின் வயிற்றைச் சுற்றிக் கயிற்றால் இறுக்கினாள். குழந்தை தனது சௌலப்யத்தால்

அதற்குக் கட்டுப்படுகிறது அது எளிமை. அந்தத் தாமோதரன் தான் தன்னைக் கர்ப்பத்தில் தாங்கிய தேவகியின் கர்ப்ப்பையை ஒளிபெறச் செய்தான். அது பெருமை . அண்டசரா சரங்களையும் தன் வயிற்றுள் அடக்கியவன் என்ற பொருளும் உண்டு. அது எல்லாமான வியாபகத் தன்மை. இப்படிப்பட்ட தாமோதரனின் துணைவியாக இருப்பதும் பெருமை தானே! தாமோதரனின் பெருந்துணையைப் போற்றுகின்றோம்

**மலர்மகளின் ஆணையிலே மண்டலங்கள் ஓடும் - அவள்**
**வண்ண விழிப் பார்வையிலே நம்செல்வம் கூடும்**

பிருகுமா முனிவன் பெற்ற பெண்மணி போற்றி, ஆதிப்
பெருந்தகை திருமால் மார்பில் பீடுடன் அமர்ந்தாள் போற்றி
முருகவிழ் தாமரைப்பூ முகிழ்த்திடும் தேவி போற்றி
பெருகு தாமோதரன்தன் பெருந்துணை போற்றி போற்றி

******

**15 நமோஸ்து காந்த்யை கமலேக்ஷணாயை**
**நமோஸ்து பூத்யை புவன ப்ரசூத்யை**
**நமோஸ்து தேவாதி பிரர்ச்சிதாயை**
**நமோஸ்து நந்தாத்மஜ வல்லபாயை**

**கந்தமா மலரைப் போன்ற கண்ணினாள் காந்தி போற்றி**
**முந்திடும் புவனச் செல்வம் முழுமையும் ஆனாள் போற்றி**
**இந்திர தேவர் எல்லாம் இறைஞ்சிடும் தலைவி போற்றி**
**நந்தனின் மகனாய் வந்த நாரணன் தேவி போற்றி**
**15**

தாமரை மலரையொத்த கண்களைக் கொண்டவள்.திருமகள். தாமரைமலர் குளிர்ந்த நீர்நிலையில் இருப்பது. மிகவும் குளுமையாகத் தண்ணென்றிருப்பது. திருமகளின் கண்களும் அப்படித்தான். மிகவும் குளிர்ர்ச்சி பொருந்தியது. அதனால் பரிவு மிக்கது. அத்தகைய கண்களைக் கொண்ட திருமகளைப் போற்றுகிறோம்.

உலகத்தில் செல்வம் என்று எவைஎவை உண்டோ அவற்றிற்கெல்லாம் அதிபதியாக இருப்பவள் திருமகள். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை. பொருளில்லாதவரை" இல்லாளும் வேண்டாள், ஈன்றெடுத்த தாய் வேண்டாள் செல்லாது அவன் வாயின் சொல்". எனவே ஒருவன் நலமாக வாழவேண்டுமென்றால் திருமகளின் அருள் வேண்டும். செல்வங்களின் அதிபதியாக இருக்கும் திருமகளைப் போற்றுகின்றோம்

தேவர்களைத் தேவர்களாக இயங்க வைப்பவள் திருமகள். அவளுடைய தயவு வேண்டி எல்லாத் தேவர்களும் தவங்கிடப்பார்கள். இளமையும் சாவாமையும் இருந்தாலும் கூட த் தேவர்களுக்கும் வளம் வேண்டும். அவர்களுக்கிடையேயும் ஏற்றத் தாழ்வுகள் உண்டு. அவர்கள் வளமாக வாழவேண்டுமென்றால் திருமகளின் அருள் வேண்டும். அதற்காக அவர்கள் திருமகளை இறைஞ்சுகிறார்கள். தேவர்களால் இறைஞ்சப்படும் திருமகளைப் போற்றுகிறோம்.

நாராயணன்தான் கண்ணனாக வருகிறான். கண்ணன் ஆயர்பாடியின் தலைவன் நந்த கோபனின் வீட்டிற்கு அவனுடைய மகனாக வந்து சேருகிறான். அப்படிக் கண்ணனாக நந்தனில்லம் வந்த நாராயணின் துணைவியாகிய தேவி திருமகளைப் போற்றுகின்றோம்

**தேவர்கள் இறைஞ்சு கின்ற**
**திருமகள் பாதம் போற்றி**
**ஆவலாய் நம்மைக் காக்கும்**
**அம்மைசீர் அடிகள் போற்றி**

கந்தமா மலரைப் போன்ற கண்ணினாள் காந்தி போற்றி

முந்திடும் புவனச் செல்வம் முழுமையும் ஆனாள் போற்றி

இந்திர தேவர் எல்லாம் இறைஞ்சிடும் தலைவி போற்றி

நந்தனின் மகனாய் வந்த நாரணன் தேவி போற்றி
15

.

அடுத்த போற்றியாக வருவது

பெருகு தாமோதரன் தன் பெருந்துணை போற்றி போற்றி. திருமாலின் பன்னிரு திருநாமங்களில் இறுதி நாமமாக வருவது தாமோதரன்

தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன் என்கிறாள் ஆண்டாள். வளர்ப்புத்தாய் ஆகிய யசோதை குழந்தை கண்ணனின் வயிற்றைச் சுற்றிக் கயிற்றால் இறுக்கினாள். குழந்தை தனது சௌலப்யத்தால் அதற்குக் கட்டுப்படுகிறது அது எளிமை. அந்தத் தாமோதரன் தான் தன்னைக் கர்ப்பத்தில் தாங்கிய தேவகியின் கர்ப்பப்பையை ஒளிபெறச் செய்தான். அது பெருமை . அண்டசரா சரங்களையும் தன் வயிற்றுள் அடக்கியவன் என்ற பொருளும் உண்டு. அது எல்லாமான வியாபகத் தன்மை. இப்படிப்பட்ட தாமோதரனின் துணைவியாக இருப்பதும் பெருமை தானே! தாமோதரனின் பெருந்துணையைப் போற்றுகின்றோம்

**மலர்மகளின் ஆணையிலே மண்டலங்கள் ஓடும் - அவள்**
**வண்ண விழிப் பார்வையிலே நம்செல்வம் கூடும்**

பிருகுமா முனிவன் பெற்ற பெண்மணி போற்றி, ஆதிப்
பெருந்தகை திருமால் மார்பில் பீடுடன் அமர்ந்தாள் போற்றி
முருகவிழ் தாமரைப்பூ முகிழ்த்திடும் தேவி போற்றி
பெருகு தாமோதரன்தன் பெருந்துணை போற்றி போற்றி

------------------------------------------------------------

**16 சம்பத்கராணி சகலேந்த்ரிய நந்தநாநி**

**சாம்ராஜ்யதான விபவானி சரோருஹாக்ஷி**

**தத்வந்தநாநி துரிதோ த்ரணோத்யதாநி**

**மாமேவ மாதர நிஸம் கலயந்து மாந்யே**

**அன்னையே, உனக்கு நாங்கள் அளித்திடும் வணக்கம் எல்லாம்**

**பொன் தரும், செல்வம் நல்கும், புலன்களுக்கின்பம் ஊட்டும்**

**பன்னரும் உயர்வு கூட்டும், பாபத்தைப் பிடுங்கித் தீர்க்கும்**

**இன்னரும் குவளைக் கண்ணி, இலக்குமி தொழவைப்பாயே!** 16

**கனகதாராஸ்தோத்திரத்தில் உயிரான பாடல் இது**

.காஞ்சிப் பரமாச்சார்யாளுக்கு மிகவும் பிடித்த பாடல். இதற்குத் தனியாகவே வியாக்யானம் எழுதியிருக்கிறார்.
மகாகவி பாரதியார் விநாயகர் நான்மணிமாலையிலே மணக்குள விநாயகரைப் பார்த்து தனக்கு வேண்டியவற்றைப் பட்டியலிட்டு விநாயகப்பெருமானே இவையெல்லாம் வேண்டும் எனச் சொல்வேன் நீ 'அங்ஙனே ஆகுக " என்று மட்டும் சொல் அது போதும் என்கிறார்.

இதோ பாரதி கேட்பது

**ஞானாகா சத்து நடுவே நின்று நான்**
**பூமண்டலத்தில் அன்பும் பொறையும்**
**விளங்குக, துன்பமு மிடிமையு நோவுஞ்**

**சாவும் நீக்கிச் சார்ந்த பல்லுயிரெலாம்**

**இன்புற்று வாழ்க என்பேன்! இதனை நீ**

**திருச்செவி கொண்டு திருவுள மிரங்கி**

**'அங்ஙனே யாகுக' என்பாய், ஐயனே!**

**இந்நாள், இப்பொழு தெனக் கிவ்வரத்தினை**

**அருள்வாய்; ஆதி மூலமே!**
அது என்னவோ கொரோனா வைரஸ் பிடியிலிருந்து உலகத்தை

இப்பொழுதே காக்க வேண்டி விநாயகனைப் பாரதியார் தீர்க்க தரிசனமாக வேண்டுவதுபோல் இருக்கிறது.

பகவத் பாதர் திருமகளைப் பார்த்து "அம்மா, நான் ஒன்றே ஒன்று மட்டும் உன்னிடம் கேட்பேன். நீ அங்ஙனே ஆகுக என்று மட்டும் சொல்லிவிடு . அது போதும் என்கிறார்.

பகவத்பாதரும் ஒன்றே ஒன்று கொடு எனக் கேட்கிறார்

அவருடைய அந்த ஒரே ஒரு வேண்டுகோளுக்குத் திருமகள் "ததாஸ்து" என்று சொல்லிவிட்டால் என்னவெல்லாம் நமக்குத் தாமாகவே கிடைக்கும் எனப் பட்டியலிடுகிறார். சரி அவர்கேட்கிற அந்த ஒன்றுதான் என்ன?

வணக்கம். ஆம், அதாவது திருமகளைத் தொழுகிற அதாவது வந்தனம் செய்கின்ற தன்மையையும் தகுதியையும் கொடு" என்று கேட்கிறார். அதனால் என்ன கிடைக்கும். அதுதான் அவர் கொடுக்கிற பட்டியல். அந்த ஒன்றை மட்டும் கேட்பதாலே நாம் என்னவெல்லாம் கேட்க விரும்புவோமோ அதற்கும் மேலே கிடைக்குமென்றால் ஏன் இதைக்கொடு அதைக் கொடு என்று ஒவ்வொன்றாகக் கேட்க வேண்டும்! சரி என்ன எல்லாம் கிடைக்கும்

பொன் தரும். - பொன் என்பது செல்வம் மட்டுமல்ல . அது ஒரு பாதுகாப்பு. . வாங்குகிற நகைகளையெல்லாமா பெண்கள் போட்டுக்கொள்கிறார்கள் . பின்னால் ஒரு அவசியத்துக்கு உதவும் என்று பாதுகாப்புக் கருதி சேமப்பெட்டகத்தில் பூட்டியல்லவா வைக்கிறார்கள்

செல்வம் நல்கும்- நமக்குப் பயன்படக் கூடிய எல்லாவிதமான வளங்களையும் கொடுக்கும். சில நல்ல பண்புகளும் செல்வங்கள்தாம். கல்வியும் ஒரு செல்வம்.

வள்ளல் தன்மையும் ஒரு செல்வம். இசை, எழுத்து, ஓவியம் எனப் பலப்பல செல்வங்கள் ஏன் பக்தி கூட ஒரு செல்வந்தான்.

ஐம்புலன்களுக்கும் நல்ல வகையில் இன்பமூட்டும்

ஐம்புலன்களையும் அடக்கிவைக்கவேண்டும் என்று சொல்கிறார்கள். திருமகளை வணங்கினால் ஐம்புலன்களுக்கும் இன்பமூட்டும் என்கிறாரே பகவத் பாதர். ஐம்புலன் இன்பங்கள் தேவையில்லை என்றால் ஆண்டவன் அவற்றை ஏன் படைக்கிறான் . எதற்கும் ஒரு காரணகாரியம் இருக்குமல்லவா/ அதனாலே தான் நல்லவகை நுகர்ச்சி எனச் சொல்கிறோம். ஒரு மனிதன் பெறவேண்டிய பதினாறு பேறுகளில் நல் நுகர்ச்சி என்பதும் ஒன்று என்று சொல்லப்படுகிறது.

நல்ல பதவிகளைக் கொடுக்கும். பேரும் புகழும் கொடுக்கும். எல்லாவற்றுக்கும் மேலாக ஜன்ம ஜன்மங்களாகச் சேர்த்து வைத்திருக்கும் பூர்வ ஜென்ம வினைகளையும் பாபங்களையும், இம்மையில் செய்த பாகங்களையும் வேரடி ஆழம் வரை சென்று பிடுங்கிப் போட்டுவிடும். கோவில்களில் பழையன கழித்து முற்றிலும்

புதியன வாக ஆக்கும் பூர்ணோத்தாரணம் செய்கிறார்கள் அல்லவா? அந்தப் பூர்ணோத்தாரணம் தான் இங்கும் நடக்கிறது . பாபங்கள் அடியோடு பிடுங்கி எறியப்படுகின்றன. அதனால் திருமகளின் பக்தன் பாபவினையற்ற புதியவனாக மாறிவிடுகிறான்

மேலே சொன்ன அனைத்துமே திருமகளுக்குச் செய்கின்ற வந்தனம் கொடுத்துவ வீடுகிறதாம். அது உறுதி என்று அறிகிற போது ஒவ்வொன்றாக ஏன் கேட்க வேண்டும் உனக்கு வந்தனம் செய்ய வை . அது போதும் " என்று சொன்னால் போதாதா" இதைத்தான் அவனருளாலே அவன்தாள் வணங்குதல் என்று சொல்கிறார்கள்

அன்னையே, உனக்கு நாங்கள் அளித்திடும் வணக்கம் எல்லாம்

பொன் தரும், செல்வம் நல்கும், புலன்களுக்கின்பம் ஊட்டும்

பன்னரும் உயர்வு கூட்டும், பாபத்தைப் பிடுங்கித் தீர்க்கும்

இன்னரும் குவளைக் கண்ணி, இலக்குமி தொழவைப்பாயே!

**வந்தனம் செய்வோம்**
**வளமாய் வாழ்வோம்.**

****

**17 யத் கடாக்ஷ ஸமுபாஸ நாவிதி:**

**சேவகஸ்ய சகலார்த்த ஸம்பத:**

**ஸந்தநோதி வசநாங்க மாநசை:**

**த்வாம் முராரி ஹ்ருதயேஸ்வரீம் பஜே**

**இனியவன் முராரி நெஞ்சம் ஈர்த்ததை ஆளும் அம்மா**

**உனதருள் கடைக்கண் வீச்சில் உபாசகன் விரும்பும் செல்வம்**

**அனைத்துமே பெறுவான், உண்மை, அன்னையே யானும் உன்னை**

**மனம் மொழி மெய்யினாலே, வணங்கினேன் வாழ்த்துவாயே! 17**

இனியவன் முராரி நெஞ்சம் ஈர்த்ததை ஆளும் அம்மா- அதாவது திருமால் மிகவும் இனியவன். திருமகளுக்கு மட்டும் இனியவன் என்பதன்று. அருள்புரிவதில் அவன் எல்லோருக்குமே இனியவன், முராரி என்று சொல்வதாலே பகைவர்களை வென்று அடியாரைப் பாதுகாப்பவன் அவன் என்பது விளங்குகிறது. அவன் திருமகள் நெஞ்சத்தை ஆளுகிறான் என்று சொல்வதை விட அவள் திருமாலின் நெஞ்சத்தை ஆளுகிறாள் என்று சொல்வதில் ஒரு விசேஷம் இருக்கிறது . ஆளுபவர் சொன்னால் ஆளப்படுபவர் கேட்கவேண்டியது தானே!. இதனாலே அடியவருக்கு இரண்டுவிதமான பலன்கள் கிடைக்கின்றன. அவனாக அருள்வது ஒன்று. அவள் சொல்லி அருள்வது ஒன்று. இவை இல்லாமல் மூன்றாவதாக அவளே நேரடியாக அருள்வது ஒன்று.

அவள் தன் கடைக்கண் பார்வையினால் அவளது அடியார்களுக்குச் செல்வத்தை அள்ளிக்கொடுக்கிறாள். அவளது திரு நாமத்தைத் திரும்பத் திரும்ப ஜபிக்கும் அடியவர்களுக்கு அவர்கள் விரும்பும் செல்வத்தை அவர்கள் விரும்பிய வண்ணம் நலந்தரும் வகையில் மாற்றிக் கொடுக்கிறாள். இவற்றை அடைய அவளது பக்தன் செய்ய வேண்டியவை சில உண்டு.

மனம் ஒன்றி வணங்குவது,

வாக்கினால் அவள் புகழே பேசுவது

மெய்யினால் அவளைப் பரவுவது.

திருநாவுக்கரசர் சொல்லுகிறார்

**வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்**
**தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனை**

**சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே**
**வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.**

வாய் கொடுத்திருப்பதே இறைவனைப் போற்றுவதற்காகத்தான்,

நெஞ்சம் இருப்பதே அவனை நினைப்பதற்காகத்தான். சென்னி கொடுத்திருப்பது அவனை வணங்குவதற்காகத்தான்,

நாவுக்கரசர் ஒரு பதிகம் முழுவதுமே நம்முடைய உறுப்புகள் சிவபெருமானைப் பரவுவதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்று கூறுகிறார்

**தலையே நீவணங்காய்**

**கண்காள் காண்மின்களோ**

**செவிகாள் கேண்மின்களோ**

**மூக்கே நீமுரலாய்**

**வாயே வாழ்த்துகண்டாய்**

**கைகாள் கூப்பித்தொழீர்**

**ஆக்கை யாற்பயனென் - அரன்**
**கோயில் வலம்வந்து**
**பூக்கையா லட்டிப் போற்றியென் னாதஇவ்**
**ஆக்கை யாற்பயனென் ?.**

ஆகையால்தான் பகவத் பாதர் இவற்றைத் திருமளுக்கு ஏற்றி அன்னையே யானும் உன்னை மனம் மொழி மெய்யினாலே, வணங்கினேன் வாழ்த்துவாயே என்கிறார்

**தலை தாழ்த்துவோம்- திருமகளை வாழ்த்துவோம் வாழ்த்துவோம் வாழ்த்துப் பெறுவோம்.**

-----------------------------------------------------------

**18 சரசிஜ நிலயே சரோஜ ஹஸ்தே**

**தவளதமாம் சுககந்த மால்ய சோபே**

**பகவதி ஹரிவல்லபே மநோஜ்ஞே**

**த்ரிபுவன பூதிகரி ப்ரஸீத மஹ்யம்**

**தாமரை உறையும் செல்வி, தாமரை கையில் கொண்டோய்**

**தூமணி மாலை, பூச்சு சுத்தவெண் உடை அணிந்தோய்**

**நேமியான் தேவி, சக்தி, நெஞ்சினில் அமுதே காக்க!**

**சேமமாய் உலகம் மூன்றும் செலுத்துவோய் காக்க காக்க!**

இந்தப்பாடலும் கிட்டத்தட்ட ஒரு போற்றிப் பாடல் தான் தாமரை உறையும் செல்வி போற்றி தாமரை கையில் கொண்டோய் போற்றி. தூமணி மாலை பூச்சு சுத்த வெண் உடையணிந்தோய் போற்றி நேமியான் தேவி போற்றி

சக்தி போற்றி நெஞ்சினில் அமுதே போற்றி
சேமமாய் உலகம் மூன்றும் செலுத்துவோய் போற்றி

முந்தையப் பாட்டில் மனம் மொழி மெய்யினாலே வணங்கினேன் என்று சொன்னாரல்லவா? அதை இந்தப்பாடலில் செயல் படுத்திக்காட்டுகிறார். என்ன சொல்லவேண்டு மென்பதை மனத்தினால் சிந்தித்து ஒழுங்கு படுத்திக் கொள்கிறார். மெய்யிலே ஒன்றான வாயின் மூலமாக வாக்கினால் போற்றிப் பாடுகிறார். மனம், மொழி, மெய் மூன்றும் இங்கே செயல்படுவதைக் காணுகிறோம்.
தாமரையில் வதிபவளே, தாமரையைக் கையில் கொண்டவளே அழகான தூய மணி மாலை அணிந்திருப்பவளே, செம்பஞ்சுக் குழம்பும் முகத்திலும் பாதங்களிலும் மஞ்சள் பூச்சும் கொண்டு திகழ்பவளே, தூய வெண்ணிற ஆடை அணிந்திருப்பவளே , நினைக்க நினைக்க அமுதாக இனிப்பவளே, மூன்று உலகங்களையும் தன் ஆணையின் கீழ் இயக்குபவளே திருமகளே போற்றி போற்றி எங்களைக் காப்பாயாக என வேண்டுகிறார்.

**மூன்று உலகங்களையும் திருமகள் நமக்காக இயக்குகிறாள் மனம் மொழி மெய் என்னும் மூன்றையும் திருமகளைப் போற்றி நாம் இயக்குவோம்.**

**19 திக்கஸ்திபி: கநககும்ப முகாவ ஸ்ருஷ்ட**
**ஸ்வர்வாஹிநீ விமல சாருஜலாப்லுதாங்கீம்**
**ப்ராதர் நமாமி ஜகதாம் ஜனனீ மசேஷ**
**லோகாதி நாதக்ருஹிணீ மம்ருதாப்தி புத்ரீம்**

**திசைகரி எட்டும் கங்கை செம்பசும் பொற்குடத்தில்**
**விசைபெற எடுத்து வந்து விளங்குநீர் ஆட்டும் நங்கை**
**இசைபெறும் மாலின் தேவி, இனியபாற் கடல்பி றந்தாள்**
**அசைவுறு ஞால அன்னை, அதிகாலை வணங்கு கின்றேன் 19**

லக்ஷ்மி பாற்கடலில் எழுந்துவந்த போது அவளை எதிர்கொண்டழைத்து தங்கப்பொற்குடத்தில் கங்கையை நிரப்பி அவளுக்குத் திருமஞ்சனம் செய்தன திக்கஜங்கள். அத்திகஜங்களின் பெயர் :ஐராவதம் ,புண்டரீகம் , வாமனம் ,குமுதம் ,அஞ்சனம் ,புஷ்பதந்தம் ,சார்வபௌமம் ,சுப்ரதீபம் .. எனவே அவள் கஜ லக்ஷ்மி எனவும் அறியப்படுகிறாள். திக்கஜங்கள் எட்டும் அதிகாலைப் பொழுதிலே திருமகளுக்குப் பொற்குடத்திலே கங்கையைக் கொணர்ந்து திருமஞ்சன மாட்டுவதை வழக்கமாகக் கொண்டுள்ளன. அப்படி அஷ்ட திக்கஜங்கள் பொற்குடத்தில் கங்கையைக் கொணர்ந்து நீராட்டும் தேவியே, இனிய பாற்கடலில் பிறந்தவளே, புகழ்பெற்ற திருமாலின் தேவியே என்கிறார் பகவத் பாதர். லக்ஷ்மி திருப்பாற்கடலில் எழுந்து வரும் போது திக்கஜங்கள் திருமஞ்சனம் ஆட்டிய பிறகு தேவி இப்பொழுதே இங்கேயே சுயம்வரம் நடத்திவிடவேண்டும் என்றாளாம். பலர் வரிசையிலே நின்றார்களாம். தேவி ஒரே தாவலாக திருமாலின் மார்பில் ஏறி அமர்ந்துவிட்டாளாம் . அங்கிருந்து அகலமாட்டேன் என்றாளாம். திருமாலும் ஏற்றுக்கொண்டாராம் அப்படிப்பட்ட திருமாலின் தேவியே, இயங்கிக் கொண்டிருக்கிற அண்ட சராசரங்களின் அன்னையே உன்னை அதிகாலைப் பொழுதிலே வணங்குகிறேன் என்கிறார். இதிலிருந்து திருமகளை அதிகாலைப் போதிலே வணங்கவேண்டும் என்பது தெரிகிறது. அல்லவா , அல்லது இப்படிச் சொல்லலாம். அதிகாலைப் போதிலேயே வணங்கத் தொடங்கிவிட வேண்டும்.

**திசைகரி எட்டும் நீராட்டும் அம்மை**

**திருமகளைப் பணியுங்கள் அவள் காப்பாள் உம்மை**



**20 கமலே கமலாக்ஷ வல்லபே த்வம்**

**கருணா பூரத ரங்கிதை ரபாங்கை:**

**அவலோகய மாமகிஞ்ச நாநாம்**

**ப்ரதமம் பாத்ரம க்ருத்ரிமம் தயாயா**

**நிறைமலர் கமலக் கண்ணன் நெஞ்சமே , முதன்மை யான**

**வறியன்யான் இதுபோதாதா? மாணருள் நீகொடுக்க**

**எறிதிரை அருளின் வெள்ளம் இலங்கிடும் கண்கள் கொண்டோய்**

**செறியும் உன் கடைக்கண்ணாலே சிறியனை நோக்குவாயே**! 20

திருமகள் கமல மலரில் அமர்பவள். திருமாலின் கண்களோ அழகிய தாமரையைப் போன்றவை. நீலத் திருமேனி. கமலக் கண்கள் கொண்டவன். அவனின் நெஞ்சகத்தில் வீற்றிருக்கும் அம்மே, யாருக்குத் தேவையோ அவர்களுக்குத்தான் செல்வத்தைக் கொடுக்கவேண்டும் என்று நினைக்கிறாய் அல்லவா? அப்படியென்றால் நான்தான் முதன்மையான ஏழை. என்னைப்போல எந்தச் சொத்தும் இல்லாத ஒரு ஏழை இருக்கமுடியுமா? எனவே நீ கொடுப்பதற்கு ஏற்ற பாத்திரம் நான் . இது போதாதா தாயே! அருட்கடலின் அலைகள் மோதும் அழகிய கண்கள் கொண்டவளே. நீ உனது அருள் மிகுந்த கடைக்கண் பார்வையை மட்டும் என்பால் திருப்பு அது போதும். அந்தப் பார்வை கொடுக்கும் ஐஸ்வர்யத்துக்கு ஈடேது?. கருணை செய்து என்னைப் பார்ப்பாய் தேவி என வேண்டுகிறார்” பகவத் பாதர். அவருக்காகவா கேட்கிறார். நம் அனைவருக்காகவும்தான் கேட்கிறார்.

**வறியாருக்கு ஈவது உன் பார்வை- அம்மா**
**வறியவன் நான் வேறென்ன தேவை?**

---

**21 ஸ்துவந்தி யே ஸ்துதி பிரமீ பிரந்வஹம்**

**த்ரயீமயீம் த்ரிபுவன மாதரம் ரமாம்**

**குணாதிகா குருதர பாக்ய பாகிநோ**

**பவந்தி தே புவி புதபாவிதாஸயா:**

**பூத்தவோர் உலகம் மூன்றும் புரந்திடும் தாயை, இந்தத்**

**தோத்திரத் தாலே நாளும் தொழுபவர் மேன்மை காண்பார்**

**வாய்த்திடும் நல்ல பண்பு, வளர்ந்திடும் செல்வம், நல்லோர்**

**ஏத்திடும் அறிவு ,ஞானம் இனிமைகள் பெறுவார், உண்மை! 21**

இந்தப் பாடல் பலஸ்ருதி. ஆதாவது நூற்பயன் என்று சொல்வார்கள். இந்தப்பாடல்களை ஒழுங்காக மனமொன்றிப் படித்தால், படிப்பவர்க்கு என்னவெல்லாம் கிடைக்கும் என்று இப்பாடல் சொல்கிறது.

இந்த உலகம் மூன்றையும் தன் அருள் நோக்கால் காப்பாற்றும் திருமகளை இந்தத் தோத்திரத்தாலே நாளும் தொழுபவர்களுக்கு நல்ல மேன்மை கிட்டும். அதாவது உயர்வானவை என்று என்னவெல்லாம் உண்டோ அவை எல்லாம் கிட்டும். நல்லது. அவைகிட்டி அவற்றைச் சரியாகப் பயன்படுத்தும் பண்பில்லாவிட்டால் என்ன செய்ய? அதனாலே நல்ல பண்பு தானாகவே வாய்த்திடும். வளர்ந்துகொண்டே இருக்கக்கூடிய செல்வம் கிட்டும். .

பேறுகளிலெல்லாம் பெரிய பேறு சான்றோர்களால்". ' இவன் நல்லவன், வல்லவன், அறிவு மிக்கவன் என்று வாழ்த்தப்பெறுவதுதான். அந்த வாழ்த்துக் கிட்டும், இனிமையானவை எல்லாம் கிட்டும். முக்தி பெறுவதற்கு வேண்டிய ஞானம் கிட்டும். இவ்வளவு பலன்களை அள்ளித்தரக்கூடிய இத்தோத்திரத்தை மனமொன்றிக் கற்போமாக,, இவற்றைப் பாடித் தொழுவோமாக!

# அன்னபூர்ணாஷ்டகம்

1.நித்யானந்தகரீ வராபயகரீ ஸௌந்தர்ய ரத்னாகரீ
நிர்தூதாகில கோரபாபநிகரீ ப்ரயக்ஷ மாகேச்வரி !
ப்ராலேயாசல வம்சபாவனகரீ காசீபுரா தீச்வரீ
பிக்ஷ£ம் தேஹிக்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ ॥

நித்தியா னந்தமும் நிறையருள் அபயமும் தருமெழில் தேவ தேவி
அத்தனை பயங்களும் அழித்திடும் அம்மையே, முன்வரும் மாஹேச்வரி
அச்சனின் குலமாசு தீர்த்த பரி சுத்தமே காசீபுர நாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

2.நாநாரத்ன விசித்ரபூஷணகரீ ஹேமாம்பரா டம்பரீ
முக்தாஹார விடம்பமான விலஸத்வக்ஷே£ஜ கும்பாந்தரீ !
காச்மீராகருவானி தாங்கருசிரா காசீபுராதீச்வரி
பிக்ஷ£ம் தேஹி க்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ !!

விசித்திர ரத்தினப் பொன்னிழை ஆடைகள் புனைந்திடும் அருள்நாயகி
அசைந்திடும் நல்முத்து மாலையின் இடைவழி குதிக்குமிள
முலையன்னமே!
மெச்சுபுகழ் காஷ்மீர நறுமணச் சிங்காரி, காசீ புரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

3.யோகானந்தகரீ ரிபுக்ஷயகரீ தர்மைகருஷ்டாகரீ
சந்த்ரார்கானல பாஸமானயஹரீ த்ரைலோக்யரக்ஷ£கரீ
ஸர்வைச்வர்யகரீ தப:பல கரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹி க்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ !!

யோகமா னந்தமும் உறுபகை நீக்கமும் உவந்தறம் காப்பவள்நீ
ஏகமாய் மதிபகல் அக்கினி ஜோதிநீ, மூவுலகாள்பவள்நீ
கச்சிதச் செல்வங்கள் தவப்பயன் நல்கிடும் காசீபுரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

4.கைலாஸாசல கந்தராலயகரீ கௌரீஹ்யுமா சாங்கரீ
கௌமாரீ நிகமார்த்தகோசரகரீ ஹ்யோங்கார பீஜாக்ஷரீ!
மோக்ஷத்வார கவாட பாடனகரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷாம் தேஹி க்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ !!

ஓங்குகை லாசகுகை வாசியே கௌரியே கனகமே கௌமாரியே
ஓங்காரி, மறைகாட்டும் ஒய்யாரி, பிரம்மமே ஒளியாக உயர்தேவியே
உச்சமா முக்தியின் தலைவாசல் திறந்திடும் காசீபுரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

5.த்ருச்யாத்ருச்ய விபூதி வாஹனகரீ ப்ருஹ் மாண்டபாண்டோதரீ
லீலாநாடகஸ¨த்ர கேலனகரீ விஜ்ஞானதீ பாங்குரீ
ஸ்ரீவிச்வேச மன:ப்ரஸாதநகரீ காசீபுராதீச்வரி
பிக்ஷ£ம் தேஹி க்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ !!

இகபரம் செல்வங்கள் ஈந்திடும் அம்மையே, அண்டங்கள் உண்ட தேவி
நகருமிந் நாடகச் சூத்திர தாரியே ஒளிஞானச் சுடர்தீபமே
இச்சையாய் இறைவிஸ்வ நாதனுளம் மகிழவரும் காசீபுரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

6.ஆதிக்ஷ£நிதஸமஸ்த வர்ணநிகரீ சம்புப்ரியா சாங்கரீ
காச்மீர த்ரிபுரேச்வரீ த்ரிநயனீ விச்வேச்வரீ சர்வரீ
ஸ்வர்க த்வார கவாட பாடநகரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹி க்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரீ !!

ஆதியகரத்துடன் அக்ஷர அடங்கல் நீ சங்கரி சம்பு தேவி
ஜோதி முக்கண்ணிநீ, உலகான மூன்றையும் காத்திடும் தலைவி நீயே!
உச்சமா சொர்க்கத்தின் தலைவாசல் திறந்திடும் காசீ புரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

7.உர்வீ ஸர்வஜனேச்வரீ ஜயகரீ மாதா க்ருபாஸாகரீ
நாரீநீலஸமான குந்தலதரீ நித்யான்னதானேச்வரீ
ஸாக்ஷ£ன் மோக்ஷகரீ ஸதாசுபகரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹிக்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணேச்வரி

யாவர்க்கும் தலைவியே அன்னையே கருணைமா வாரிதி வெற்றி உமையே
தேவியே , அன்னமே, நிதம் தரும் தெய்வமே, கருநெய்தல் குழல் மேகமே
இச்சைகள் எய்திடப் பக்தருக் கருள் செய்யும் காசீ புரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

8.தேவீ ஸர்வ விசித்ர ரத்னருசிரா தாக்ஷ£யணீ ஸுந்தரி
வாமா ஸ்வாதுபயோதரா ப்ரியகரீ ஸௌபாக்யமாஹேச்வரீ

பக்தாபீஷ்டகரீ ஸதாசுபயகரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹிக்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணச்வரீ ॥

பற்பல விசித்திர இரத்தினம் அணிதேவி தாக்ஷாயணி சுந்தரி
முற்பட இடப்பாகம் அமுதூட்டும் அன்னையே ஆதரிக்கும் தெய்வமே
இச்சைகள் நனவாக பக்தர்க்கு மகிழ்வூட்டும் காசீபுரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி

9.சந்த்ரார் கானல கோடி ஸத்ருசீ சந்த்ராம்சு பிம்பாதரீ
சந்த்ரார்காக்னி ஸமான குண்டலதரீ சந்த்ரார்க வர்ணேச்வரீ
மாலாபுஸ்தகபாச ஸாங்குசதரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹிக்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணச்வரீ ॥

மதிபகல் அக்கினி கோடியாயக் கோடியாய் மதி இதழ் பெற்றவள் நீ
மதிபகல் அக்கினி குண்டலம் மதிபகல் மந்திரம் கொண்டவள்நீ
புத்தகம் ஜபமாலை பாசாங்குசம் கொண்ட காசீ புரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

10.க்ஷத்ரத்ராரகரீ மஹாபயகரீ மாதா க்ருபாஸாகரீ
ஸர்வானந்தகரீ சிவகரீ விச்வேச்வரீ ஸ்ரீதரீ
தக்ஷ£க்ரந்தகரீ நிராமயகரீ காசீபுராதீச்வரீ
பிக்ஷ£ம் தேஹிக்ருபாவலம்பனகரீ மாதாந்நபூர்ணச்வரீ ॥

துணிவினை நல்கிடும் அன்னையே அகிலத்தின் நாயகி அபயதேவி
அணிகடல் கருணையே ஆனந்தம், மங்கலம் நல்கிடும் அரிசோதரி
தட்சனின் வேள்விகெடச் செய்தருள் நலம்செய்த காசீ புரநாயகி
பிச்சையிடு கருணையே வடிவான தேவியே மாதான்ன பூர்ணேச்வரி!

11.அன்னபூர்ணே ஸதாபூர்ணே சங்கரப்ராணவல்லபே ।
ஜ்ஞானவைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷ£ம் தேஹிச பார்வதீ ॥

அன்னபூர்ணேச்வரி, எப்போதும் பூரணி, சங்கரன் உயிர்நாயகி
உன்னத ஞானவைராக்யமே சித்திக்கப் பிச்சையிடு நீ பார்வதி!

12.மாதா ச பார்வதீதேவீ பிதா தேவோ மஹேச்வர: ।
பாந்தவா:சிவபக்தா:ச ஸ்வதேசோ புவனத்ரயம் ॥

பார்வதி தேவி என் தாய், தந்தை மகேச்வரன், பந்துக்கள் சிவபக்தர்கள்
சேர்கின்ற என்தேசம் மூவுலகம் என்றனுக்கு மூவுலகம் மூவுலகமே!

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்

தியான சுலோகங்கள்

மௌன வாக்யா ப்ரகடித பரப்ரம்ம தத்வம் யுவானாம்
வர்ஷிஷ்த அந்தேவஸத் ரிஷிகணை ராவ்ருத்தம் ப்ரம்ஹ நிஷ்டை
ஆச்சார்யேந்த்ரம் கரகலிஹ்த சின்முத்ரம் ஆனந்த ரூபம்
ஸ்வாத்மாராமம் முதித வதனம் தக்ஷிணாமூர்த்தி மீடே!

மோனமாய்ப் பரப்ரம்ம தத்துவம் போதிக்கும் இளையகுரு போற்றி, போற்றி!
முந்துமறை தேர்ந்தரிஷி மாணவர்கள் சூழ்ந்தபெரும் வித்தகர் போற்றி போற்றி
ஞானமய சின்முத்ரை தாங்குகரம் கொண்டகுரு நாயகம் போற்றி போற்றி
தானெனும் நிலையிலே ஆனந்தம் கொளுமோன சத்தியம் போற்றி போற்றி!

வடவிடபி சமீபே பூமிபாகே நிஷான்னம்
சகலமுனிஜனானாம் ஜ்ஞான தாதாரம் ஆராத்
திரிபுவன குருமீஷம் தக்ஷிணாமூர்த்தி தேவம்
ஜனன மரண துக்கஸ்சேதத்க்ஷம் நமாமி

கல்லால மரத்தடி நீழலில் பூமியில் அமர்ந்தவர் போற்றி போற்றி
கனிவொடு ஞானங்கள் நல்கிடும் குருமூர்த்தி கழல்களே போற்றி போற்றி
பொல்லாத பிறப்பிறப் பெனுந்துயர் பொடிபடப் புரிபவர் போற்றி போற்றி
புவனங்கள் மூன்றுக்கும் குரு தக்ஷிணாமூர்த்தி புனிதர்தாள் போற்றி போற்றி!

சித்ரம் வடதரோர் மூலே விருத்தா சிஷ்யா குரோர் யுவா
குரோஸ்து மௌன வ்யாக்னாம் சிஷ்யாஸ்து சின சம்சயா!

ஆலமர நீழலில் இளையகுரு முதுசீடர், அப்பப்பா விந்தை விந்தை
அவர் மோனமாகவே அளித்த தவஞானம்அச் சீடர்கள் அகத்தி னுள்ளே
சாலவே மிகுந்தபல சந்தேகம் யாவையும் சற்றேனும் மிச்சம் இன்றி
தானாகத் தெளிவித்து ஞானாதிக்கம் கொளும் தகைமையைத் தந்ததன்றே!

குருவே சர்வ லோகனாம் பிஷஜே பவ ரோகினாம்
நிதயே சர்வ வித்யானாம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:

வித்தைகள் அனைத்துமே மொத்தமாய்க் குடிகொளும் வித்தக ஞான மூர்த்தி
வெந்திடும் சம்சார வியாதியின் வேதனை போக்கிடும் கருணை வெள்ளம்
அத்தனை உலகுக்கும் அருள்ஞான ஒளிநல்கி ஆட்கொளும் குரு நாயகம்
ஆலமா மரநீழல் அமர்ந்தருள் தஷிணா மூர்த்திதாள் போற்றி போற்றி!

ஓம்நமோ ப்ரணவார்த்தாய சுத்த ஞானைக மூர்த்தயே நம:,
நிர்மலாயா ப்ரசந்தாய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:

போற்றி ஓம் போற்றியே என்றென்றும் தூய்மையாம் புனிதர்தாள் போற்றி
போற்றி!
போற்றி ஓம் போற்றியே எக்காலும் அமைதியில் பொருந்துவார் போற்றி போற்றி
போற்றி ஓம் போற்றியே சுத்தமெய் ஞானமாம் புண்ணியர் போற்றி போற்றி
போற்றி ஓம் போற்றியே தக்ஷிணா மூர்த்திதாள் போற்றியே போற்றி போற்றி!

நூல்

1.விச்வம் தர்பண த்ருச்யமான நகரீதுல்யம் நிஜாந்தர்கதம்
பச்யந்நாத்மனி மாயயா பஹிரிவோத்பூதம் யதா நித்ரயா!
ய:ஸாக்ஷாத்குருதே ப்ரபோதஸமயே ஸ்வாத்மானமேவாத்வயம்
தஸ்மைஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே!!

கனவுறு காட்சிகள் மாயையால் வெளியிலே காண்பதாய்த் தோற்றுதல்
போல்
கண்ணாடி தன்னிலோர் நகரினைக் காண்பதாய்க் கண்டிடும்
அனுபூதியில்
அனுபவத்தில் இந்த அண்டம் அனைத்துமே யானென எவர்காண்பரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி அவர்
தக்ஷிணாமூர்த்தியே!

2.பீஜஸ்யாந்தரி வாங்குரோ ஜகதிதம் ப்ராங்நிர்விகல்பம் புன:
மாயாகல்பிததேசகால கலனா வைசித்ர்ய சித்ரீக்ருதம்!
மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹா யோகீவ ய:ஸ்வேச்சயா
தஸ்மை ஸ்ரீகுரு மூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே!!

விதையினுள் மரமெனப் படைக்குமுன் பேரண்டம் விளங்கிய நிலைமை
மாற்றி
வித்தக யோகியர் போல்சுய விருப்பினால் விரிவுடன் தான் படைத்தே
அதில்பின்னர் காலவெளி மாயையால் தன்னையே அலர்ந்திடச்
செய்தவர் யார்

அவர் பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி அவர்
தக்ஷிணாமூர்த்தியே!

3.யஸ்யைவஸ்புரணம் ஸதாத்மகமஸத்கல்பார்த்தகம் பாஸதே
ஸாக்ஷ£த் தத்வமஸீதி வேதவசஸா யோ போதயத்யாஸ்ரீதான்!
யத்ஸாஷ்த்கரணாத்பவேத் ந புனராவ்ருத்திர் பவாம் போநிதௌ
தஸ்மைஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்யே!!

யாருடை உண்மைக்கு வேறிலாத் தன்மையால் அகிலத்தில்
பொருள்களாமோ
யார்பதம் பணிந்திடின் பணிந்தவர்க்கு 'அது நீயே' மறைவாக்கி
னருள்கிட்டுமோ
யார் அதைத் தந்தபின் மறுபடி பிறப்பிலா வாழ்வினை அருள்புரிவரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி அவர்
தக்ஷிணாமூர்த்தியே!

4.நாநாச்சித்ரகடோதர ஸ்தித மஹாதீபப்ரபா பாஸ்வரம்
ஜ்ஞானம்யஸ்யது சக்ஷ§ராதி கரணத்வாரா பஹி:ஸ்பந்ததே!
ஜானாமீதி தமேவபாந்த மனுபாதி ஏதத்ஸமஸ்தம்ஜகத்
தஸ்மைஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே!!

பற்பல துவாரங்கள் உளஜாடி நடுவிலுயர் தீபத்தின் ஒளி பரவல்போல்
பார்க்கும்விழி புலனாதி கரணங்கள் வழியெவரின் படர்ஞான
ஒளிமின்னுமோ
அற்புத மாயெவர் ஒளியினால் பொருள்மய அண்டமே ஒளிநல்குமோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி அவர் தக்ஷிணா
மூர்த்தியே!

5.தேஹம்ப்ராண மபீந்த்ரியாண்யபி சலாம் புத்திம் ச சூன்யம் விது:
ஸ்த்ரீபாலாந்த ஜடோபமாஸ்த்வஹ மிதிப்ராந்தாப்ருசம் வாதின:!
மாயாசக்தி விலாஸ கல்பிதமஹா வ்யாமோஹ ஸம்ஹாரிணே
தஸ்மைஸ ஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்தயே!!

உடல் உயிர் ஐம்பொறி மாறிடும் அறிவுடன் ஒன்றுமில்லாப் பூஜ்ஜியம்
உண்மையே எனமாயை மறைப்பினும் பிள்ளை, பெண்,விழியிலார்,
மூடர் போல

அடுபிழையாகவே எண்ணுவார் குறைபோக்கி அகவொளி எவர் தருவரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி, அவர் தக்ஷிணாமூர்த்தியே!

6.ராகுக்ரஸ்ததிவாகரேந்துஸத்ருசோ மாயாஸ மாச்சாத நாத்
ஸன்மாத்ர:கரணோபஸம்ஹரணதோ யோsபூத்ஸுஷுப்த:புமான்!
ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோதஸமயே ய:ப்ரத்யபிஜ்ஞாயதே
தஸ்மை ஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே!!

பொறிபுலன் செயல்களை ஒடுக்கியே ஆழ்ந்ததோர் தூக்கத்தில் எவர்புகுவரோ?
புகுந்தபின் கிரஹணச் சூரியன் சந்திரன் போலெவர் மாயை யாலே
அறமறைந்திருப்பரோ விழித்தபின் உறங்கினோம் எனுநினைவகங் கொள்வரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குரு மூர்த்தி அவர் தக்ஷிணாமூர்த்தியே!

7.பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி
வ்யாவ்ருத்தாஸ்வனு வர்த்தமான மஹமித்யந்த:ஸ்புரந்தம் ஸதா!
ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம் யோ முத்ரயா பத்ரயா
தஸ்மைஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்த்யே!!

குழந்தைமுதல் நிலைகளில் விழிப்புமுதல் யாவிலும் நானெனும் நிலையொன்றுதான்
இழையுமந் நிலைகளின் உண்மையை, தன்மையை ஒருபோதும் மறவாமலே
முழுமையும் உணர்ந்திடச் செய்கின்ற போதத்தை மொழியாமல் யார் மொழிவரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குரு மூர்த்தி அவர் தக்ஷிணாமூர்த்தியே!

8.விச்வம் பச்யதி கார்ய காரணதயா ஸ்வஸ்வாமி ஸம்பந்தத:
சிஷ்யாசார்யதயா ததைவ பித்ரு புத்ராத் யாத்மனா பேதத: ।
ஸ்வப்னே ஜாக்ரதி வாய ஏஷ புருஷோ மாயாபரிப்ராமித:
தஸ்மை ஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தயே!

எந்தஓர் ஆண்தகை தந்தைமகன் குருசீடன் உடையவன் உடைமை என்றே
இயங்குமொளி மாயையின் சுழற்சியால் காரண காரிய உலகுதன்னின்
அந்தங்கள் அனைத்தையும் கனவிலும், விழிப்பிலும் தம்முளே தாம்காண்பரோ
அவர் பதம் பணிகிறேன் அவர் அருள் குரு மூர்த்தி அவர் தக்ஷிணா மூர்த்தியே!

9.பூரம்பாம்ஸ்ய நலோsநிலோsம்பரமஹர் நாதோ ஹிமாம்சு:புமான்
இத்யா பாதி சராசராத்மகமிதம் யஸ்யைவ மூர்த்யஷ்டகம் ।
நான்யத்கிஞ்சன வித்யதே விம்ருசதாம் யஸ்மாத் பரஸ்மாத்விபோ:
தஸ்மைஸ்ரீகுருமூர்தயே நம இதம் ஸ்ரீதக்ஷிணா மூர்தயே!!

மண்புனல் தீ காற்று வானவெளி சூரியன் மதி , ஜீவன் என வெண்குண வகைகளாய்த் தாம் ஒளிர்ந்து அசையுமசையா வண்டம் ஆகவே வதியுஞான
அண்ணல் எவர்தனையன்றி எப்பொருளும் இல்லையென ஆய்ந்தறிந்தார் கொள்வரோ
அவர்பதம் பணிகிறேன் அவர் அருள் குருமூர்த்தி அவர் தக்ஷிணாமூர்த்தியே!

10.ஸர்வாத்மத்வமிதம் ஸ்புடீக்ருதமிதம் யஸ்மாதமுஷ்மின்ஸ்தவே
தேநாஸ்ப ச்ரவணாத்ததர்த்தமனனாத் த்யானாத் ச ஸங்கீர்தனாத்
ஸர்வாத்மத்வ மஹாவிபூதி ஸஹிதம் ஸ்யாத் ஈச்வரத்வம் ஸ்வத:
ஸித்யேத் தத்புநஷ்டதா பரிணதம் சைச்வர்ய மவ்யாஹதம் ॥

எல்லாம் இவ் வான்மா என்று இப்பாடல் தன்னிலே விரிவா யுரைத்துள்ளதால்
இதைமனம் கொள்வோரும் கேட்போரும் கற்போரும் இசைப்போரும் எண்ணுவோரும்
எல்லாமே தாமெனும் ஈஸ்வர நிலைகொள்வர் , எய்தும் அத்தன்மையாலே
இறைமையின் எண்குணம் தடையின்றிச் சேர்ந்திடும் தெய்வீகச் சிறப்பெய்துவார்!

# பவானி அஷ்டகம்

1 ந தாதோ, ந மாதா, ந பந்துர் ந தாதா,
ந புத்ரோ, ந புத்ரீ, ந ப்ரத்யோ, ந பர்த்தா,
ந ஜாயா ந வித்யா, ந வ்ருத்திர் மமைவ
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**தாயோ இலை தந்தையிலை சுற்றம் இலை நட்பு**
**சேயோ இலை பெண்ணோ இலை பெண்டோ இலை ஏவல்**
**பதியோ இலை அறிவோயிலை தொழிலோ இலை காப்பு**
**கதி வேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

2 பவாப்தா வபாரே மஹாதுக்க பீரு
ப்ர-பாத ப்ர-காமி ப்ர-லோபி ப்ர-மத்த
கு-சம்சார பாஷ ப்ர-பத்தா ஸதாகம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**கடலில்படு துரும்பேயென துயர் மோதிடும் கோழை**
**உடற்காமமும் பிணிபாவமும் மதுபோதையும் ஆசை**
**வதிவாழ்க்கையில் வலைமாகடல் அழுக்காறுடன் உள்ளேன்**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

3 ந ஜானாமி தானம்; ந ச த்யான யோகம்;
ந ஜானாமி தந்ரம்; ந ச ஸ்தோத்ர மந்ரம்;
ந ஜானாமி பூஜாம்; ந ச ந்யாஸ யோகம்;
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**அறியேனுயர் தானம் ஒளிர் தியானம் அருள் யோகம்**
**அறியேன் சிறிதுந்தந் திரமறியேன் புகழ் மந்த்ரம்**
**விதிபூசைகள் அறியேன் துற வறயோகமும் தேறேன்**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

4 ந ஜானாமி புண்யம் ந ஜானாமி தீர்த்தம்
ந ஜானாமி முக்திம் லயம் வா கடாசித்
ந ஜானாமி பக்திம் வ்ருதம் வாபி மாதர்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**நற்காரியம் செய்தேனிலை சென்றேனிலை தீர்த்தம்**
**பொற்பாகிய முக்தி இலை இல்லை உளம் ஒன்றல்**
**விதிநேமமும் அறியேன் விரதங்கள் இலை தாயே!**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

5 கு கர்மீ, கு சங்கீ, கு புத்தி: கு தாஸ:
குலாசார ஹீன: கதாசார லீன:
கு த்ருஷ்டி:கு வாக்ய ப்ரபந்த: சதாகம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**தீச்செய்கைகள் தீயர்படை தீப்புத்தியில் ஏவல்**
**தீய்க்கும் குலப் பண்பாடுகள் தீமையுள சிந்தை**
**சதிநோக்குகள், பழிவார்த்தைகள், முழுதாம் எப்போதும்**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி!**

6 ப்ரஜேஷம் ரமேஷம் மஹேஷம் சுரேஷம்
தினேஷம் நிஷீதேஷ் வரம்வா கடாசித்
ந ஜானாமி சான்யத் ஸதாகம் ஷரண்யே
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**அறியேன் அயன், அறியேன் அரி, அறியேன் அரன் தேவர்**
**அறியேன் கதிர், அறியேன் மதி, அறியேன் பிற தெய்வம்**
**பதமே பணிகின்றேன் உனை முழுநேரமும் தாயே!**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

7 விவாதே விஷாதே ப்ரமாதே ப்ரவாஸே
ஜலே சா னலே பர்வதே ஷத்ரு மத்யே
அரண்யே ஷரண்யே ஸதா மாம் ப்ரபாஹீ
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**சர்ச்சை துயர், ஆபத்துகள் சாரும் பயணங்கள்**
**அச்சம்தரும் தீ நீர் மலை , ஆன்ற மரக் காடு**
**எதிரானவர் இடைநின்றெமைக் காக்கப் பணிகின்றேன்**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**

8 அனாதோ தரித்ரோ ஜரா ரோக யுக்தோ
மஹாக்ஷீண தீன: ஸதா ஜாட்ய வக்த்ரா
விபத்தெள ப்ரவிஷ்ட: ப்ரனஷ்ட: சதாஹம்
கதிஸ்த்வம் கதிஸ்த்வம் த்வம் ஏகா பவானீ.

**யாரும் இலை வறுமைநிலை, முதுமை தரும் நோய்கள்**
**சேரும் தளர் வெகிறும் வெளிர் தீனன் எனும் போதும்**
**எதிரும்விபத் திடையும் எமைக் காக்கப் பணிகின்றேன்**
**கதிவேறிலை கதிவேறிலை கதிநீ பவானி**





# குருபாதுகா ஸ்தோத்ரம்

அனந்த ஸம்ஸார ஸமுத்ரதாரா
நௌகாயி தாப்யாம், குருபக்தி தாப்யாம்
வைராக்ய ஸாம்ரஜ்யத பூஜநாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் ||

**எல்லையிலா சம்சார வாரி கடக்க**
**நல்லதொரு படகாக உற்ற துணையாகும்**
**அருளாகிக் குருபக்தி வைராக்யம் நல்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி**

கவித்வவாராசினி ஸாகராப்யாம்
தௌர்பாகய் தாவாம்புத பாலிகாப்யாம்
தூரீக்ருதா நம்ர விபத்தப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம ||

**பரிபூர்ண நிலவாக நிறைஞானம் நல்கும்**
**எரிகின்ற துயர்தீர்க்கும் மழையாகப் பெய்யும்**
**கருத்தோடு பணிவோர்க்கு அவலங்கள் போக்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி!** 2

நதா யயோ: ஸ்ரீ பதிதாம் ஸமீயு:
கதாசிதப்யாசு தரித்ரவர்யா:
மூகாஸ்ச வாசஸ்பதிதாம் ஹிதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம் ||

**வாட்டும்தீ வறுமையினை ஓட்டி நிதி நல்கும்**
**நாட்டமுள ஊமையனைப் பேச்சாளன் ஆக்கும்**
**அரிதான நலமெல்லாம் உரித்தாகச் செய்யும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி** 3

நாலீக நீகாஸ பதாஹ்ருதாப்யாம்
நாநாவிமேஹாதி நிவார்காப்யாம்
நமஜ்ஜனாபீஷ்ட ததிரதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம் ||

**கமலமலர் போன்ற குரு பாதங்கள் பற்ற**
**அமைவுடனே நமைஈர்க்கும், அறியாமை யாலே**
**பெருகுகிற ஆசைகளைப் போக்கிவளம் நல்கும்**
**குருநாதன் பாதுகைள் போற்றி ஓம் போற்றி** 4

ந்ருபாசி பௌலீவ்ரஜரத்னகாந்தி
ஸரித் விராஜத் ஜஹகன்யகாப்யாம்
ந்ருபத்வதாப்யாம், நதலோகபங்க்தே
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம் ||

**அரசர்களின் கிரீடத்தில் ஒளிர்மணியாய்த் தோன்றும்**
**பெருமுதலை நிறைநதியுள் எழில் கன்னியாகும்**
**வரிசையிலே நின்றெவரும் வணங்குமர சாக்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி!** 5

பாபந்தகார்க்க பரம்பராப்யாம்
தபாத்ரயாஹீந்த்ர ககேஷ்வராப்யாம்
ஜாட்யாப்தி சம்ஷோஷணவாடவாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுபாக்யாம் ||

**ஒளியாரும் ஆதவனாய்ப் பாவ இருளோட்டும்**
**நெளிசர்ப்பத் துயரெல்லாம் கருடனென மாய்க்கும்**
**பெருகும்தீ எனவாகி அறியாமை தீய்க்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி** 6

சமாதி ஷட்சுப்ரத வைபவாப்யாம்
சமாதிதானவ்ரத தீக்ஷிதாப்யாம்
ரமாதவான்ரிஸ்திர பக்திதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் ||

**மனமடக்கம் முதலாறு பண்பிற் புகுத்தும்**
**புனித முள சமாதிநிலை புகும்நிலைமை கூட்டும்**
**திருமாலின் சரணங்கள் கூடும் அருள் சேர்க்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றிஓம் போற்றி!** 7

ஸ்வார்சாபராணாம் அகிலேஷ்டதாப்யாம்
ஸ்வாஹா ஸஹாயாக்ஷ துரந்தராப்யாம்

ஸ்வாந்தாஸ்ச பாவப்ரத பூஜனாப்யாம்
நமோ நம:ஸ்ரீ குருபாதுகாப்யாம் ||

**எப்போதும் பணிசெய்யக் காத்துள்ள சீடன்**
**முப்போதும் வளங்காண நல்லாசி நல்கும்**
**பரிவாகத் தன்னையே தான் காண வைக்கும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி** 8

காமாதிஸர்ப வ்ரஜகாருடாப்யாம்
விவேக வைராக்ய நிதிப்ரதாப்யாம்
போதப்ரதாப்யாம் த்ருதமோக்ஷதாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குருபாதுகாப்யாம் ||

**கருடனென ஆசைகளாம் பாம்புகளைக் கொல்லும்**
**கருதரிய வைராக்யம் தான்கொள்ள வைக்கும்**
**பெருஞானம் தான்நல்கி முக்திவழி காட்டும்**
**குருநாதன் பாதுகைகள் போற்றி ஓம் போற்றி** 9



## குரோரஷ்டகம்

1.சரீரம் ஸுரூபம் ததா கலத்ரம்
யச:சாரு சித்ரம் தனம் மேருதுல்யம்மிமி
மன:சேந்த லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

அழகுமிகு திட தேகம் அழகான பெண்டு
விழையும்புகழ் மேருநிகர் செல்வமிக உண்டு
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

2.கலத்ரம் தனம் புக்ரபௌத்ராதி ஸர்வம்
க்ருஹம் பாந்தவா:ஸர்வ மேதத்ஹிஜாதம் ।
மன:சேத் ந லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

விரிந்தபணம் மனைவிமகன் பேத்தியொடு பேரன்
வீடு மனை சொந்தபந்தம் மிகக்கொண்ட வீரன்
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

3.ஷடங்காதி வேதோ முகே சாஸ்த்ரவித்யா
கவித்வாதி கத்யம் ஸுபத்யம் கரோதிமி
மன:சேத் நலக்னம் குரோ ரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம்

ஆறங்கம் வேதங்கள் சாத்திரத்தில் மேதை
யாப்பறிவார் கவிநெய்வார் யாத்திடுவார் காதை
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

விதேசேஷ§ மான்ய:ஸ்வதேசஷ§ தன்ய:
ஸதாசார வ்ருத்தேஷ§ மத்தோ ந சான்ய: ।
மனஸ்சேத் ந லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

வெளிநாட்டில் பெருஞ்சீர்த்தி உள்நாட்டில் கீர்த்தி
மிகநல்ல பண்பாட்டில் நிகரில்லா நேர்த்தி

நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

5.க்ஷமாமண்டலே பூப பூபாலப்ருந்தை:
ஸதா ஸேவிதம் யஸ்ய பாதாரவிந்தம்மி
மனஸ்சேத் நலக்னம் குரோ ரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

மன்னர்களும் தலைவர்களும் காலடியில் நன்று
வணங்கிடுவர், எந்நாளும் தொழுதிடுவர் நின்று
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

6.யசோ மே கதம் திக்ஷ§தானப்ரதாபாத்
ஜகத் வஸ்து ஸர்வம் கரே யத்ப்ரஸாதாத்மி
மனஸ்சேத் ந லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

வள்ளலிவன் என்றுபுகழ் பெற்றிருப்பான் எங்கும்
மனம்விழைப, பெறும்நன்மை அதனாலே பொங்கும்
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

நபோகே நயோகே நவா வாஜிராஜௌ
நகாந்தா முகே நைவ வித்தேஷ§ சித்தம்வீ
மனஸ்சேத் ந லக்னம் குரோ ரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

போகத்தில் யோகத்தில் மனைவியெழில் முகத்தில்
புரவிகளில் செல்வத்தில் பிடிப்பில்லை அகத்தில்
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

8.அரண்யே ந வா ஸ்வஸ்ய கேஹே ந கார்யே
ந தேஹே மனோ வர்ததே மே த்வநர்க்யேவீ
மனஸ்சேத் ந லக்னம் குரோரங்க்ரிபத்மே
தத:கிம் தத:கிம் தத:கிம் தத:கிம் ॥

காடுசொந்த வீடு மனம் அடையவிழை மொத்தம்
கூடு விலை மதிக்கவொணா எதிலுமிலை சித்தம்,
நன்றுகுரு பாதம் மனம் ஒன்றவிலை என்றால்
ஏதுபயன் ஏதுபயன் ஏதுபயன் ஏது?

9.குரோ ரஷ்டகம் ய:படேத் புண்யதேஹீ
யதிர்பூபதி:ப்ரஹ்மசாரீ ச கேஹீவீ
லபேத் வாஞ்சிதா ர்த்தம் பதம் ப்ரஹ்மஸம்ஜ்ஞம்
குரோருக்தவாக்யே மனோ யஸ்ய லக்னம்மிமி

ஞானிபிர்மச் சாரிமன்னன் இல்லறத்தான் என்றே
நன்றுகுரோ ரஷ்டகம்சொல் புண்ணியர்கள் நன்றே
ஒன்றிமனம் குருவார்த்தை கொண்டிடுவர் என்றால்
நன்றவர்தம் இலக்கடைவார் அதுவேதான் பிரம்மன்.



# நிர்வாண ஷட்கம்

1 மனோ புத்தி அஹங்கார சித்தானி நாஹம்,
ந-ச ஷ்ரோத்ர ஜிஹ்வே, ந-ச க்ராண நேத்ரே,
ந-ச வ்யோம பூமிர், ந-தேஜோ ந-வாயு:
சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!

**மனம்புத்தி அகங்காரம் சித்தம்நான் இல்லை**
**காதில்லை மூக்கில்லை நாக்கில்லை கண்கள்**
**வானில்லை புவியில்லை ஒளியில்லை வாயு**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**

2 ந-ச ப்ராண சங்க்யோ, நவை பஞ்சவாயு:
ந-வா சப்த தாதுர், ந-வா பஞ்சகோஷ:
ந-வாக் பாணி பாதம், ந- சோபஸ்த பாயு:
சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!

**நானில்லை ஒளிப்ராணன் ஐந்துவகை வாயு**
**நானில்லை எழுதாது ஐந்துவித கோசம்**
**நானில்லை வாக்கு,கால், கையாச னங்கம்**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**

(ஐந்து கோசங்கள்- அன்னமய கோசம், பிராணமய கோசம்,மனோமயகோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் ஐந்து வாயு - பிராணவாயு, அபானாய வாய், வியான வாயு , உதானாய வாயு, சமானாய வாயு)

**3 ந-மே த்வேஷ ராகௌ, ந-மே லோப மோஹௌ,**
**மதோ நைவ, மேநைவ மாத்ஸர்ய பாவ:**
**ந-தர்மோ ந-ச அர்த்தோ, ந-காமோ ந-மோக்ஷ:**
**சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!**

**வெறுப்பில்லை விருப்பில்லை இலை லோபம் மோகம்**
**வெற்றான மதமில்லை மாத்ஸர்யம் இல்லை**
**அறமில்லை பொருளில்லை இலைகாம மோட்சம்**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**

4 ந-புண்யம் ந-பாபம், ந-சௌக்யம் ந-துக்கம்!
ந-மந்த்ரோ ந-தீர்த்தம், ந-வேதா ந-யக்ஞ:
அஹம் போஜனம் நைவ, போஜ்யம் ந-போக்தா,
சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!

**இலைபுண்யம், இலைபாபம், இலை சௌக்யம் துக்கம்**
**இலைமந்த்ரம், இலை தீர்த்தம், இலைவேதம் யாகம்**
**இலை தீனி, இலை ஊண்கள், இலை உண்ணுகின்றோன்**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**

5 ந-ம்ருத்யுர் ந-சங்கா, ந-மே சாதிபேத:
பிதா நைவ, மே நைவ மாதா, ச-ஜன்மா
ந-பந்துர் ந-மித்ரம், குருர் நைவ சிஷ்யா:
சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!

**சாவில்லை, இலைஐயம் , வெறும் ஜாதி பேதம்**
**தாய்தந்தை இலை பிறப்பு இறப்பென்ப தில்லை**
**சொந்தங்கள் இலை நண்பன் குருசீடன் இல்லை**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**

6 அஹம் நிர்-விகல்போ, நிராகார ரூபோ,
விபுத் வாச்ஸ, சர்வத்ர, சர்வேந்த்ரி யானாம்
ந-ச சங்கதம் நைவ, முக்திர் ந-மேய
சிதானந்த ரூபம்! சிவோஹம்! சிவோஹம்!

**எனக்கில்லை குணபேதம், எனக்கில்லை வடிவம்**
**எங்கெங்கும் எப்போதும் புலனெங்கும் உள்ளோன்**
**எனக்கில்லை பந்தங்கள் எனக்கில்லை முக்தி**
**சிதானந்த ரூபம் சிவன்நான் சிவன்நான்**



# தோடகாஷ்டகம் - தோடகர்

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே மஹிதோப நிஷத் கதிதார்த்த நிதே!

ஹ்ருதயே கலயே விமலம் சரணம் பவ சங்கர தேசிக மே சரணம்

**சகலா கல ஞான மதுக் கடலே, உயர்வோங் குமுப நிடதப் பொருளே**
**அகலா திதயத் துனதார் பதமே குருசங் கரதே சிகனே சரணம்!**

2. கருணா வருணாலய பாலய மாம் பவஸாகரதுக்க விதூன ஹ்ருதம்
ரசயாகிலதர்சன தத்வவிதம் பவ சங்கர தேசிக மே சரணம் (2)

**கருணா லயமே, அருள்வா ரிதியே, துயர்வாழ் கடலாழ் எனையா ளுவையே!!**
**விரிவா மறைஞா னவிளக் கருள்க, குருசங் கரதே சிகனே சரணம்!**

3. பவதா ஜனதா ஸ¨ஹிதா பவிதா நிஜபோத விசாரண சாருமதே
கலேயேச்வர ஜீவ விவேக விதம் பவ சங்கர தேசிக மே சரணம் (3)

**நிறையே, வளமே, ஜனமே பெறவே, உளமார் உணர்வாழ் உயர்வா னவனே,**
**இறையாத் துமஞா னமளித் தருள்வாய் , குருசங் கரதே சிகனே சரணம்!**

4. பவ ஏவ பவானிதி மே நிதராம்ஸமஜாயத சேதஸி கௌதுகிதா I
மம வாரய மோஹமஹாஜல திம் பவ சங்கர தேசிக மே சரணம் (4)

**பெருமா னுனையே புவியா னமுதல் இறையா உணரப் புரி மாமணியே!**
**பெருமோ கவலைக் கரைசேர்த் திடுக, குருசங் கரதே சிகனே சரணம்!**5.

ஸுக்ருதே அதிக்ருதே பஹு§தா பவத:பவிதா ஸமதர்சன லாலஸதா
அதி தீனமிமம் பரிபாலய மாம் பவ சங்கர தேசிக மே சரணம் (5

**நலமே விளையும் செயலே பெருகின் எவரும் சமமாய்க் கருதற் கியலும்**
**இழிவா னவனாம் எனைக் காத் தருள்க குருசங் கரதே சிகனே சரணம்!**

6. ஜகதீ மவிதும் கலிதாக்ருதய: விசரந்தி மஹா மஹ;ஸச்சலத:
।அஹிமாம் சுரிவாத்ர விபாஸ புர: பவ சங்கர தேசிக மே சரணம் (6)

**ஒருவே டமதில் புவிகாத் திடவே ஒளிஜோ தியெனத் திகழ்மா மணியே,**
**குருவே கதிரோன் ஒளிகொண் டவனே குருசங் கரதே சிகனே சரணம் !**

7. குருபுங்கவ புங்கவகேத ந தே ஸமதா மயதாம் நஹி கோபி ஸுதி:
।சரணாகதவத்ஸல தத்வ நிதி பவ சங்கர தேசிக மே சரணம் (7)

**குருவின் குருவே, சிவமா னவனே, அறிவில் நினக்கீ டுளரோ**
**உலகில்?சரணம் பெறுவார்க் கருள் தத் வநிதி குருசங் கரதே சிகனே சரணம்!**

8. விதிதா ந மயா விசதைக கலா நச கிஞ்சன காஞ்சனமஸ்தி குரோமித்ரு தமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம் பவ சங்கர தேசிக மே சரணம் (8)

**8 அறிவே துமிலேன் கலைகற் றுமிலேன், பொருளே துமிலேன் அடியேன் குருவே,**
**விரைவாய் அருளே இயல்பா னவருள் குருசங் கரதே சிகனே சரணம்!**

*************************************************************

காஞ்சிப் பரமாச்சார்யாள் யாத்த” மைத்ரீம் பஜத “

**மைத்ரீம் பஜத ,அகில ஹ்ருஜ் -ஜேத்ரீம்!**
**ஆத்மவதேவ பராநபி பச்யத !**
**யுத்தம் த்யஜத! ஸ்பர்தாம் த்யஜத!**
**த்யஜத பரேஷ்வக்ரமம்--ஆக்ரமணம்!**
**ஜநநீ ப்ருதிவீ காமதுகாஸ்தே ,**
**ஜனகோதேவ : ஸகல தயாளு :!**
**தாம்யத!தத்த !தயத்வம் ஜனதா:!**
**ச்ரேயோ பூயாத் ஸகல ஜநாநாம் !**

அன்புடன் நட்பைப் போற்று
அதுபிறர் இதயம் வெல்லும்
அன்பனே உன்னைப் போலே
அடுத்தவர் தமையும் நேசி

புன்மையாம் போட்டி நீக்கு
போர்களை வெறுத்தொதுக்கு
இன்னலாய் ஆக்ர மிக்கும்
எண்ணமும் வேண்டாம் வேண்டாம்

ஈன்றவள் பூமா தேவி
எண்ணிய அளித்துக் காப்பாள்
ஆன்றநம் தேவன் தந்தை
அவன் பெருங் கருணைவள்ளல்

தான்தனை அடக்கி அன்பு
தழைத்திட இனிது வாழ்க!
வான் வளம் கொண்டு ஞால
மக்களே மகிழ்ந்து வாழ்க!

*************************************************************

# ஆதிசங்கரர்

கொக்கரித்தே எத்தனையோ சிக்கல்மதம் மக்களையே
குழப்பி அடித்திருந்த காலத்தில்- மக்கள்
கொண்டிருந்தார் வேடம்பல கோலத்தில்-அன்று
கூட்டமொரு கூட்டமென போட்டி மதத்தலைவர்
குத்துவிட்டுக் கொண்டிருந்தார் வேகத்தில் -பலர்
கொடுமைகள் பட்டிருந்தார் சோகத்தில்
அக்கிரம மாகப் பலர் வக்கிரங்கள் கொண்டுமறை
ஆகமம் பழித்திருந்த போதிலே - பலர்
ஆர்ப்பரித்துத் தான்குதித்தார் வாதிலே-உடன்
ஆண்டவனே நல்லமுறை வேண்டுமெனும் எண்ணத்தினால்
அவதாரமாக வந்தான் பாரிலே -நல்ல
ஆக்கம் கொடுத்துவிட்டான் வேரிலே
திக்கெலாம் புகழ்பரவ எக்கணமும் வாழு மதம்
சேர்த்ததுநம் சங்கரரின் போதமே - நாம்
தேடிப்பிடிப்போமவர் பாதமே-அவர்
சென்றவிட மத்தனையும் வென்றவிட மாக்கிவைத்தார்
செய்தளித்தார் அத்துவித தத்துவம்- அந்தத்
தெய்வதம்நம் காஞ்சியின் மகத்துவம்
சக்கரம் நிறுவியம்மை உக்கிரம் தனைக்குறைத்து
சாந்தம் தனிக்கருணை ஆக்கினார்- ஆதி
சங்கரரும் நல்லருளைத் தேக்கினார்- உயர்
சத்தியமும் மண்ணில்வந்து தத்துவங்கள் தந்ததனால்
சமயம் ஒழுங்குபெற நேர்ந்தது- வாழ்வில்
தர்மம் மறுபடியும் சேர்ந்தது.